11






'முத்தமிழ்க் கலா வித்துவரத்தினம்'
அமரர் அவ்வை சண்முகம் அவர்கள் நினைவாக
மதுரை காமராஜ் பல்கலைக் கழகத்துக்கு
அன்புடன் அளிக்கப்பட்டது.

**27-1-1979**

# சிற்பியின் கனவு

"மாறன்"






தமிழ்நூல் வெளியீட்டகம்

மதுரை ரோடு :: திருச்சிராப்பள்ளி

# சமர்ப்பணம்

தமிழன் தனது கவிச்செல் வத்தையும் இசைச் செல்வத் தையும் நன்கு அனுபவிப் பதற்கு வழிகாட்டிய சிந் தனைச் செல்வர் ரசிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்களுக்கு இந் நூல் சமர்ப்பணம்.



# நன்றியுரை

"ஆனந்த விகடன்" "மணிக் கொடி" "வசந்தம்", "நவ யுவன்", "சக்தி" ஆகிய பத்திரிகைகள் இக்கதைகளை முன்னமே பிரசுரித்தன. இந்தப் பத்திரிகைகளின் ஆசிரியர்களுக்கு எனது நன்றி. இப்பொழுது இவை களைப் புத்தகமாகத் தொகுத்து வெளியிட முன்வந்த மணி மன்ற அதிபருக்கும் எனது நன்றி.

"மாறன்"

# முன்னுரை



ஒரு சிறு சம்பவம். தெருவில் போகும் ஒரு பிச்சைக்காரன் மோட்டாரில் அடிபட்டுவிடுகிறான். இந்தச் சம்பவத்தை நேரில் பார்த்தவர்களும். தெரிந்தவர்களும் பிறரிடம் ஆவலோடு விவரித்துச் சொல்கிறார்கள். கேட்பவர்களும் ஆவலோடு கேட்கிறார்கள். உணர்ச்சிகளைத் தூண்டக்கூடிய சம்பவங்களைச் சொல்வதிலும், கேட்பதிலும், ஜனங்களுக்கு ஒரு விருப்பம். மக்கள், நகைச்சுவையை மட்டுமல்ல, சோக ரசத்தையும் பார்த்து, கேட்டு, படித்து அனுபவிக்கிறார்கள். உணர்ச்சிப் பசியினால் ஏற்படும் வேட்கை அது. இதனால்தான் நாடக மேடைகளும், இலக்கியமும் செழித்து வந்திருக்கின்றன.

மேலே கூறிய, பிச்சைக்காரன் அடிபட்ட சம்பவத்தைப் பலர் பலவிதமாகச் சொல்லலாம். பத்திரிகை நிருபர் புள்ளி விவரங்களுடன் எழுதிச் செய்தியாக வெளியிடலாம். கவிஞன் ஒருவன் இதை நேரில் பார்த்திருந்தால் அவனுக்கு இரக்க உணர்ச்சி பீறிட்டுக்கொண்டு வந்து விடலாம். அந்தப் பிச்சைக்காரனது ஒட்டி உலர்ந்த தேகத்திலிருந்து ஆறாய்ப் பெருகியோடும் இரத்த வெள்ளத்தையும், பக்கத்தில் கிடக்கும் தகரக் குவளையையும், அவனுடைய இந்த நிலைமைக்குக் காரணமாக இருக்கும் சமூகத்தின் குறைபாடுகளையும் பற்றி எட்டு அடிகளில் ஒரு பாட்டு இயற்றிவிடுவான். பார்ப்பவன் சிறுகதை எழுதுபவனாக இருந்தால், அந்தப் பிச்சைக்காரனுக்கு ஒரு கற்பனைக் காதலியைச்சேர்த்து செல்வந்தனாக வாழ்ந்த அவனுடைய பூர்வீக நிலைமையையும் வர்ணித்து, ஒரு சோகச் சித்திரம் அமைத்துவிடுவான். இதற்குக் கற்பனாசக்தி மட்டும் போதாது. பாஷையில் லாகவமும், கதை சொல்லும் உத்திகளும் நன்றாகத் தெரிந்திருக்கவேண்டும். இத்தகைய திறமைகளுடன், நடந்த ஒரு சம்பவத்தையோ, நடக்காத ஒரு கற்பனைச் சம்பவத்தையோ உணர்ச்சியுடன் சித்தரித்து விட்டால், அது நல்ல சிறுகதை ஆகிறது. பழக்கத்தால் ஏற்படக் கூடிய திறமைதான் இது.

சிறு கதை ஆசிரியன் கதாபாத்திரங்களோடு எந்த அளவுக்கு ஒன்றிப்போய் உணர்ச்சிகளை வெளியிடுகிருனே, அந்த அளவுக்கு அவன் அதில் வெற்றி காண்கிருன். இன்று சிறு கதை உலகில் வணங்காமுடி மன்னனுக விளங்கும் "புதுமைப் பித்தன்" அவர்கள் இத்தகைய ஜாலங்களை யெல்லாம் திறமையுடன் காட்டி வாசகர்களை உணர்ச்சி வெள்ளத்தில் திளைக்கச்செய்கிருர்.

அன்று மதுரையம்பதியிலே அறுபத்து நான்கு திருவிளை யாடல்களை ஆடி முடித்த சிவபெருமானை இன்று சென்னை நகரின் வீதியிலே கொண்டுவந்து விட்டுக் 'கந்தசாமி பிள்ளை' யுடன் விளையாட வைக்கிருர் "புதுமைப் பித்தன்". சென்னை யின் விபரீத நாகரீக வாழ்க்கையை நாம் ஆச்சரியக் கண்ணுடி போட்டுக்கொண்டு பார்ப்பதற்காகச் சிருஷ்டித்திருக்கிருர் அந்தச் சிவபெருமானை. அந்தச் சிவபெருமான் ஆச்சரியப்படும் காட்சிகளைக் கண்டு நாமும் வியப்படைகிருேம்; சிரிக்கிருேம். 'கந்தசாமி பிள்ளை' அந்தச் சிவபெருமானைத் தனது பத்திரி கைக்கு ஆயுள் சந்தாதாரர் ஆகும்படி கேட்குமிடத்தில், நன்கு சிந்தித்து அனுபவிக்கக்கூடிய ஹாஸ்யரசம் மிளிர்கிறது.

தமிழில் சிறந்த சிறு கதைகள் எழுதக்கூடியவர்கள் வெகு சிலர்தான் இருக்கிருர்கள். சிலர் அற்புதமான கற்பனைகளை வைத்துக்கொண்டு, உணர்ச்சியின்றி, பாஷையின் நயமின்றி, வெறும் பாட்டிக் கதைகளாக எழுதித்தள்ளுகிருர்கள். சிலர் ஒன்றுமில்லாததை எடுத்துக்கொண்டு உணர்ச்சி மிகுந்த நடையில் அலங்கார வார்த்தைகளை அள்ளிச் சொரிந்து ஆகாயப்பந்தல் போடுகிருர்கள். இன்னும் சிலர் தமிழிலிருந்தே தமிழுக்கு மொழிபெயர்க்கும்படி, பிறமொழிகளையும் கடு மொழிகளையும் பிரயோகித்து வாசகர்களைத் திணற அடிக் கிருர்கள். இவர்கள் எவ்வளவுதான் உணர்ச்சி மிகுந்த சம் பவத்தை எழுதினுலும் பாஷையின் கடுமையினுல் வாசகர்கள் உணர்ச்சி பாவத்தை அனுபவிக்கமுடியாமல் போய்விடுகிறது. இவர்களைப்பற்றி யெல்லாம் நான் குறை சொல்வதாக இல்லை. ஒவ்வொருவருக்கு ஒவ்வொன்றில் தனிப்பட்ட திறமை அமைந் திருப்பது இயல்புதானே.

என்னுடைய சிறு கதைகள் பதினான்கு இதோ இருக்கின்றன. நான் முன்பு சொல்லியுள்ள திறமைகள் யாவும் வெளிப்படவேண்டும் என்ற எண்ணத்தோடுதான் இந்தக் கதைகளை எழுதினேன். என் முயற்சி எவ்வளவு தூரம் வெற்றியடைந்திருக்கிற தென்பதை வாசகர்கள்தானே தீர்மானிக்கவேண்டும். அந்தப் பொறுப்பை அவர்களுக்கே விட்டு விடுகிறேன்.

"என்ன பரிசு?" "ஆனந்தக் கண்ணீர்" இவ்விரண்டு கதைகளிலுள்ள கற்பனைகளுக்கு ஆதாரமாக இருந்தவை இரண்டு ஆங்கிலக் கதைகள். தமிழில் அதுபோன்ற கற்பனைக் கதைகள் வரவேண்டும் என்ற ஆவலுடன், வெகுகாலம் சிந்தித்த பின்னர்தான் இவைகளைக் கற்பனை செய்தேன். மொழிபெயர்ப்பு, தழுவல், மாரீசம் ஆகியவைகளை வெறுப்பவன் நான். தமிழ் எழுத்தாளன் புத்தம் புதிய கற்பனைகளைச் சிந்திப்பதற்கு இந்த 'வேலைகள்' ஓரளவுக்கு இடையூறாக இருக்கின்றன அல்லவா!

தமிழுக்கு மிகமிகத் தேவையாக இருக்கும் இலக்கியங்களை மட்டிலும் பிறமொழிகளிலிருந்து கொண்டுவருவதில் தவறு இல்லை. அப்படிக் கொண்டுவரும் எழுத்தாளன், அவைகள் தனது சொந்தச் சரக்கல்ல என்பதை வெளிப்படையாகச் சொல்லிவிடவேண்டும். "என்ன பரிசு?" என்ற கதையை எழுதுவதற்கு ஒரு ஆங்கிலக் கதையின் அமைப்புத்தான் காரணமாக இருந்ததென்பதைக் கதையுடனே வெளியிட வேண்டுமென்று குறிப்பு எழுதியிருந்தேன். ஆனால் அந்தக் கதையை வெளியிட்ட "சக்தி" ஆசிரியர் அப்படி ஒப்புக் கொள்வது கௌரவக் குறைவு என்று நினைத்தோ என்னவோ அந்தக் குறிப்பை நீக்கிவிட்டார். இதை இந்த முன்னுரையிலாவது சொல்லிவிட வேண்டுமென்று ஆசை: அதையும் சொல்லிவிட்டேனாதலால் முன்னுரையை இத்துடன் முடித்துக் கொள்கிறேன்.

திருச்சி,
28—7—47.

"மாறன்"

# பொருளடக்கம்



# சிற்பியின் கனவு

பாண்டியன் விமலாதித்யன், கிருஷ்ணபுரத்தைத் தமிழ் நாட்டின் சிற்பக் களஞ்சியமாக ஆக்க நினைத்தான். கைதேர்ந்த தமிழ் நாட்டுச் சிற்பிகள் யாவரும் கிருஷ்ணபுரத்திற்கு வரவழைக்கப்பட்டனர். தான் காண நினைத்த கோவில் நிர்மாணத்தைப் பாண்டியன் சவிஸ்தாரமாக எடுத்துச் சொன்னான். சிற்பிகள் தங்கள் தங்கள் தனித் திறமையைக் காட்ட முனைந்து நின்றனர்.

அக்காலத்தில் மாதவன்தான் தமிழ் நாட்டின் சிற்ப மணியாகத் திகழ்ந்தான். கோவிலின் உள் பிரகாரச் சிலைகளைச் செதுக்க மாதவனே நியமிக்கப்பட்டான். மாதவனுடைய கை உளி எத்தகைய நுணுக்க பாவத்தையும் கல்லில் செதுக்கிக் காட்டும் வல்லமையுடையது. உயிரற்ற கற்களுக்கு உயிரும் உணர்ச்சியும் கொடுப்பான் மாதவன். சிற்பக் கலையே அவனது வாழ்க்கையின் லக்ஷியம். மாதவனுடைய அபாரமான கற்பனு சக்தி, அவனுடைய லக்ஷியப் பாதைக்கு ஒரு தீபமாக விளங்கியது. கிருஷ்ணபுரம் கோவிலில் தன் முழுத் திறமையையும்

காட்டி அழியாத சிற்பங்களை ஸ்தாபிக்க எண்ணி ஞன் மாதவன். அரசன் கட்டளைப்படி கோவில் உள் பிரகார வாசலின் இருபுறங்களிலும் வரிசையாக அமைக்கவேண்டிய சிலைகளை ஒவ்வொன்ருகச் செதுக்கி வந்தான். ஒவ்வொரு சிலையும் முடிந்தவுடன் பாண்டியன் பொன் முடிப்புகளை மாதவனுக்குப் பரிசளித்து வந்தான். தன் லக்ஷியம் உருவாகி வருவதைக் கண்டு அரசனது மனம் ஆனந்தக்கடலில் மூழ்கித் திளைத்துக் கொண்டிருந்தது. மாதவனுடைய சிற்பத் திறமையைக் கண்டு அரசன் அடிக்கடி பிரமித்து நின்ருன். சிவப்பு ரேகை ஓடியிருந்த சாதாரணக் கல்லில் ஒரு காட்டு வேடனின் காதல் நாடகத்தையே சித்தரித்து விட்ட மாதவனது கற்பனைத் திறமையைப் பற்றி அரசன் குறிப்பிட்டபோது "மாதவா, நீ கற்களுக்கு அமரத்துவம் அளிக்கும் ஒரு கவி. இதற்குமேல் என்ஞல் ஒன்றும் சொல்ல முடியவில்லை" என்றெல்லாம் அவனைப் புகழ்ந்தான். அர்ஜுனன் சிலையில் செதுக்கியிருந்த நரம்புகளின் முறுக்கையும் கனல் கக்கும் விழிகளையும் கண்ட விமலாதித்யன் கல்லாகச் சமைந்து நின்ருன். தலைகளை மாலையாக அணிந்து நின்ற வீரபத்திரன் சிலையின் முகத்தில் ஊழிக் காலத்துக் கோரச் சிரிப்பின் பாவம் அப்படியே பதிந்திருந்தது.

கோவில் உள் நடைக்குப் பக்கத்திலுள்ள தூண்களில், பழந்தமிழர்கள் மானிட அழகின் லக்ஷியமாகக் கண்ட, மன்மதனையும், ரதியையும்

சிருஷ்டிக்க எண்ணினான் சிற்பி. சில நாளில், உருவற்ற மன்மதனுக்கு மாதவன் உருக் கொடுத்து விட்டான். அங்க லக்ஷணங்கள் யாவும் பரிபூரணமாகப் பெற்றுக் கரும்பு வில்லைத் தாங்கி நின்ற ஒரு சுந்தர புருஷனை, யாரோ முனிவர் கல்லாகச் சபித்து விட்டது போலிருந்தது மாதவன் அமைத்திருந்த மன்மதன் சிலை.

மன்மதனுக்கு எதிர்ப்புறத்தில், ரதியை சிருஷ்டிக்க வேண்டும். மாதவனின் கற்பனா சக்தி, பெண்மைக்குரிய பல அழகுகளை ஆராய்ந்து ஒன்று படுத்திக்கொண்டே இருந்தது. மன்மதன் சிலை முடிந்து இரண்டு மாதமாகியும், ரதியின் பரிபூர்ண உருவம் அவன் மனதில் பதிவு பெறவில்லை. அவன் அமைக்க நினைத்த ரதியின் உருவத்திற்கெல்லாம், ஏதோ குறைபாடு இருப்பதாக அவனுடைய சிற்பத் திறமை குறை கூறிக் கொண்டிருந்தது. ரதியின் பரிபூரண சௌந்தர்யத்தைக் கற்பனை பண்ணுவதற்காக ஏகாந்தமான இடங்களை நாடிச் சென்றான் மாதவன்.

* * *

மனதை மயக்கும் மாலை வேளை. அரண்மனை உத்தியான வனத்தில் பக்ஷி ஜாலங்கள் அன்று தங்களுக்கேற்பட்ட இன்பகரமான அனுபவங்களையெல்லாம் இனிய ஒலிகளின் மூலம் தெரிவித்துக் கொண்டிருந்தன. தூய தவசிகளின்

உள்ளம் போன்று நிர்மலமாக இருந்த தடாகத்தில் சில அல்லிப் புஷ்பங்கள், மதியைக் காண்பதற்காக அங்குமிங்கும் ஆடி அசைந்து கொண்டிருந்தன. சூரியன் மலைவாய்க்குள் விழப் போவதைக் காண வேண்டாமென்றோ என்னவோ தாமரைக் கன்னி தன் அழகிய முகத்தை மூடிக் கொண்டாள். இவ்விதமான இயற்கைத் தேவியின் திருலீலைகளை மாதவன் கவனிக்கவே இல்லை. எட்டாப் பொருளை எட்டிப் பிடிக்க முயலும் துறவியைப் போல ஒரு பாரிஜாத மரத்தின் கீழ் வெகுநேரமாகச் சிந்தனையில் மூழ்கியிருந்தான்.

"சிற்பியே, உன்னுடைய கற்பனைக்கும் ஒரு எல்லை உண்டு என்பதை நீ மறந்துவிட்டாய்! உனது கற்பனைத் திறமைக்கு அப்பாற் பட்டதைக்காண ஏன் வீண் முயற்சி செய்கிறாய்? இப்பொழுது உன் மனதில் உருக்கொண்டுள்ள ரதியின் கற்பனையே உலக மக்களைத் திகைக்கச் செய்யும்......எழுந்திரு. வீணாக மனதைக் குழப்பிக்கொள்ளாதே!" என்று மாதவனுடைய கற்பனைத் திறமை அவனுக்கு ஒரு முடிவைக் காட்டிவிட்டது.

தயங்கிய மனதுடன் எழுந்து நின்றான் மாதவன். எழுந்தவுடன் திடீரென்று ஞானோதயம் ஆனவன்போல தடாகத்தை நோக்கினான். அப்பொழுது அவனது கண்களில் புதியதோர் பிரகாசம் காணப்பட்டது. தடாகத்தின் அருகில் அரசகுமாரி கனகவல்லி தன் தோழிகளுடன்

நின்றுகொண்டிருந்தாள். துக்கத் தடாகத்தில் தவித்துக்கொண்டிருந்த தாமரைக்கன்னி, கனக வல்லியின் கைகளில் அமர்ந்து ஆறுதல்பெற்றுக் கொண்டிருந்தாள்.

மாதவனுடைய கலைக்கண்கள் கனகவல்லி யின் அழகைப் பரிபூரணமாகக் காணத்துடித்தன. திறந்த விழிகளை மூடாமல் தடாகத்தை நோக்கி நடந்தான் சிற்பி.

தன்னை நோக்கி வரும் இளைஞன் தான் கோவிலில் அற்புதமான சிலைகளை வடித்தெடுத்த சிற்பி என்பதைக் கனகவல்லி தன் தோழிகள் மூலம் அறிந்துகொண்டாள். மாதவன் அருகில் வந்ததும், கனகவல்லி அவனை நமஸ்கரித்தாள். சிற்பியின் கண்கள், புன்னகையோடு கூடிய அரச குமாரியை, விழுங்கி விடுவது போலப் பார்த்தன. அடுத்த விநாடியில் மாதவன் சுய உணர்வை அடைந்தான். அரச குமாரியின் எதிரே,தான் அவ்வாறு நின்றுகொண்டிருப்பது, உலக ஆசாரத்திற்கு ஏற்றதல்ல என்று அவனுக்குத் தோன்றியது. உடனே அவளிடம் விடை பெற்றுக்கொண்டு கோவிலை நோக்கி நடந்தான். லக்ஷ்ய ரதியை மூடிக்கொண்டிருந்த கல் தூள்களை அவனுடைய கை உளி வெகு விரைவாகச் செதுக்கித் தள்ளியது.

இரண்டே நாளில் ரதியின் உருவம் பூரண மாக அமைந்துவிட்டது. விமலாதித்யன் ரதியின்

சிலையைப் பார்வையிட வந்தான். மூடுபல்லக்கில் வந்திறங்கிய கனகவல்லி மறைவான ஓரிடத்தில் நின்றுகொண்டிருந்தாள்.

புதிய சிலையைப் பார்த்த அரசன் கண்கள் சட்டென்று கனகவல்லியின் பக்கம் திரும்பின. உடனே அவனது மனதில் பெரும் புயல் எழுந்து மோதியது. "சிற்பி, இது ரதியின் சிலையா?" என்றான் அரசன். அரசனுடைய கேள்வி மாதவனுக்கு ஒரு புதிராக இருந்தது. "ஆமாம் அரசே" என்று சாதாரணமாகச் சொல்லிவிட்டுத் தலைவணங்கினான் மாதவன். அங்கிருந்த யாவரும் ரதியின் அழகைக் கண்டு ரசித்துக்கொண்டிருந்தார்கள். அரசனுடைய மனதில் மட்டிலும், எதிர்காலத்தில், பாண்டிய குலத்திற்கே இழிவு தரும் ஒரு கற்பனைக்காட்சி தோன்றி வருத்திக் கொண்டிருந்தது. ரதியின் சிலையைப்பற்றி வேறு ஒன்றுமே பேசாமல் அரசன் அரண்மனைக்குத் திரும்பிவிட்டான்.

அற்புதமான ரதியைக் கல்லில் வடித்து விட்டோம் என்ற மகிழ்ச்சியில் சிற்பியின் மனம் திளைத்துக்கொண்டிருந்தது. அரசனுடைய கேள்வியைப்பற்றியும் கோபப் பார்வையைப்பற்றியும் மாதவன் அதிகமாகக் கவலைப்படவில்லை. "கலைஞனுடைய கற்பனைக்கும் எட்டாத ஒரு அழகைப் பிரமதேவன் கனகவல்லிக்கு அளித்திருக்கிறான். அந்த அழகை உலகில் அழியாச் சிலையாக வார்த்துவிட்டோம். அரசன் இதைப்

பெரிதும் பாராட்டுவான்" என்றே சிற்பி எதிர் பார்த்திருந்தான். விமலாதித்யன் மனதில் எழுந்த குமுறல்களை மாதவன் உணர்ந்துகொள்ளவே இல்லை. கோவில் சுற்றுப்புறங்களில் நிர்மாணிக்க வேண்டிய சிலைகளைப் பற்றிக் கற்பனை செய்து கொண்டே சிற்பி தன் வீட்டுக்குச் சென்று விட்டான்.

மறுநாட்காலை. மாதவன் அரண்மனை உத்தியான வனத்தின் பக்கமாகச் சென்றுகொண்டிருந்தான்.

"சிற்பி!"

மாதவன் பின்புறம் திரும்பினான். உத்தியான வனத்தினுள் அரச குமாரி பூக்கொய்துகொண்டிருந்தாள்.

"அம்மா, நமஸ்காரம். நீங்கள் தானே கூப்பிட்டீர்கள்?"

"ஆமாம். தாங்கள் வார்த்திருக்கும் சிலைகளில் ஒன்று மட்டும் சரியாக அமையவில்லை. அதைக் கூறுவதற்காகவே நான் தங்களை அழைத்தேன். மன்னிக்க வேண்டும்!"

"குறைபாட்டைத் தைரியமாக எடுத்துக் கூறும் தங்களுடைய கலை அறிவை மெச்சுகிறேன். தாங்கள் குறிப்பிடும் சிலை எதுவென்று நான் அறியலாமோ?"

"ரதிக்கேற்ற மன்மதனைத் தாங்கள் சிருஷ்டிக்கவில்லை. இந்த ஒரே குறைபாடுதான் தாங்கள் அமைத்துள்ள சிலைகளில் நான் கண்டேன்"

"என் கற்பனை ஓட்டம் அதற்குமேல் போகவில்லை!"

"ஆண்மையின் பரிபூரண அழகை ஆண் அறிய முடியாது தான்."

"உண்மை! அரசகுமாரி, தாங்கள் ஒரு சிறந்த ரசிகை. தங்கள் அபிப்பிராயப்படி மன்மதன் சிலை எவ்வாறு இருக்கவேண்டுமென்று தெரிவிப்பீர்களா?"

"தாங்கள் ஒரு நிலைக்கண்ணாடியின் முன் நிற்கும்போது, மன்மதன் உருவத்தைப் பார்த்திருக்கலாமே!....."

மாதவனுடைய கலைக்கண்கள் காதல் கண்களாக மாறின. ராஜகுமாரிக்கு அவன் ஒன்றுமே பதில் சொல்லவில்லை. அவளுடைய முகத்தில் தவழ்ந்து கொண்டிருந்த மோகனப் புன்னகை ஒன்றையே உற்று நோக்கிக் கொண்டு நின்றான். உலகத்தையே மயக்கும் அந்தப் புன்னகையின் அர்த்த பாவத்தை மாதவன் ஒரே விநாடியில் உணர்ந்து கொண்டான். கனகவல்லியிடம் ஏதோ கூற முயன்றான். ஆனால் பேச முடியவில்லை. இதே சமயத்தில் கனகவல்லியின் தோழிகள் அவளைத் தேடிக்கொண்டு வந்தார்கள். அரசகுமாரி மாதவனிடம் விடைபெற்றுக்கொண்டு போய்விட்டாள்.

மாதவன் வீட்டை நோக்கித் திரும்பினான். அவனுடைய மனதில் புதுப்புது உணர்ச்சிகள் திடீரென்று தாக்க ஆரம்பித்தன. கலை மய மாகத் தோன்றிய உலகம் இப்பொழுது காதல் மயமாகவே காக்ஷியளித்தது. நிலைக் கண்ணாடி யின் முன் நின்று தன் அழகையே திரும்பத் திரும்பப் பார்த்து மகிழ்ந்தான்.

இரண்டொரு நாளில் கோவில் தூணில் இருந்த பழைய மன்மதன் மறைந்து விட்டான். அதற்குப் பதிலாகத் தன்னுடைய உருவத்தையே அந்த இடத்தில் செதுக்கிக் கனகவல்லியின் ஆவலைப் பூர்த்தி செய்தான் மாதவன். ராஜ குமாரியின் காதலை அழியாச் சிற்பமாக ஸ்தா பித்து விட்டோம் என்ற ஒரு ஆனந்தத்தைத் தவிர வேறு ஒன்றும் சிற்பியின் மனதில் இடம் பெறவில்லை. தேன் உண்ட வண்டைப் போல உல்லாசமாகச் சுற்றித் திரிந்து கொண்டிருந் தான்.

* * *

ஒரு நாள் இரவு. எதிர்பாராதபடி விமலா தித்யன் மாறு வேஷத்தோடு மாதவனுடைய வீட்டினுள் நுழைந்தான். வந்தது அரசன் என்று அறிந்ததும் சிற்பி தகுந்த மரியாதைக ளோடு அவனை வரவேற்றான். அரசன், மாத வன் அளித்த உபசாரங்கள் ஒன்றையும் ஏற்றுக் கொள்ளாமல், பரபரப்போடு நின்று கொண்டி ருந்தான். அவனது கண்கள் கோபத்தால் ஜொலித்தன.

"மாதவா, பாண்டிய குலத்தை உலகம் உள்ளளவும் இழிவு படுத்துவதுதான் உனது லக்ஷியமா?"

"அரசே, மன்னிக்க வேண்டும்! என்னுடைய லக்ஷியம் அதுவல்ல!"

"மன்மதன் சிலையை உன் உருவமாகவும் ரதியின் சிலையைக் கனகவல்லியின் உருவமாகவும் செதுக்கியதன் நோக்கமென்ன?"

"தற்போதைய பாண்டிய நாட்டின் பெண்மை அழகையும், அவர்களது பரிசுத்தமான காதலையும் உலகம் உள்ளளவும் தெரிந்து கொள்ளக்கூடிய ஒரு காட்சியாகவே இவைகளைச் சிருஷ்டித்தேன்.'

"என்ன சொன்னாய்? காதல்! பாண்டிய குலப் பெண்கள் அரச குலத்தினரைத் தவிர வேறு யார்மீதும் காதல் கொண்டதில்லை என்பது உனக்குத் தெரியாதா?"

"அரசே, மன்னிக்க வேண்டும். காதலுக்கு, குலம், இனம் ஆகிய வேற்றுமை கிடையாதே!"

"மாதவா, பிதற்றாதே! என் மானம் போகிறது. வேறு யாரேனும் இத்தகைய குற்றம் செய்திருந்தால், இந்த வாள்தான் அவர்களுக்குப் பதில் சொல்லும்! கலா தெய்வம்தான் இப்பொழுது உன்னைக் காத்து நிற்கிறதென்பதை உணர்ந்துகொள்."

" மன்னவா, என்மீது கோபிக்க வேண்டாம்! இனித் தங்கள் ஆக்ஞைப்படியே நடக்கச் சித்தமாயிருக்கிறேன்."

" அந்தச் சிலைகள் இரண்டையும் அங்கிருந்து அகற்றிவிட வேண்டும்."

" அரசே, அது முடியாத காரியம்! கோவில் முகட்டின் பாரம் முழுவதும், அந்தச் சிலைகளோடுள்ள தூண்களின்மீது தான் அழுத்திக் கொண்டிருக்கிறது."

"சிற்பி, என் குலப் பெருமை இத்துடன் அழிவதற்கு வழிதேடி விட்டாய்! பாண்டியனுக்குக் கலைப் பெருமையைக் கொடுத்துக் குலப் பெருமையை ஒழித்து விட்டாய்!"

" அரசே, உங்கள் குற்றச்சாட்டு விபரீதமாகவே இருக்கிறது. ரதியின் சிலையை இவ்வளவு அற்புதமாகவும் திருப்திகரமாகவும் முடிப்பதற்குக் கனகவல்லியின் அழகிய உருவம்தான் எனக்கு உற்ற சமயத்தில் கைகொடுத்து உதவியது. மன்மதன் சிலையை என் உருவாக அமைத்ததற்கு நான் பொறுப்பாளி அல்ல! அது கனகவல்லியின் வேண்டுகோள்."

" அவளுடைய வேண்டுகோளா? அவளுக்குத் தகுந்த தண்டனை நான் விதிக்கிறேன்!"

"அந்தத் தண்டனையை நானே ஏற்றுக் கொள்கிறேன். விருப்பம்தான் அவளுடையது. அதை நிறைவேற்றியது நான் தான். ஆகையால் நானே தண்டனைக் குரியவன்."

"மாதவா, நீ இனிமேல் அரச குமாரியைப் பற்றிப் பேசவோ, சிந்திக்கவோ கூடாது. சிலைகளைச் செதுக்குவதே உனது தொழில்!" என்று கூறி விட்டு அரசன் அங்கிருந்து மாறு வேஷத்தில் மறைந்து விட்டான். அன்று முதல் நாலைந்து நாட்களாக மாதவன் தன் வீட்டை விட்டு வெளியே செல்லவில்லை. பின்பு கடமை அவனைக் கோவிலுக்கு இழுத்துச் சென்றது.

கோவிலின் உள் பிரகாரத்தில், தேவ கன்னிகைகளின் நடன பாவங்களைக் கற்களில் சித்திரிக்க வேண்டுமென்று முன்னமே திட்டம் போடப் பட்டிருந்தது.

அதன்படியே பல்வேறு நாட்டிய முத்திரைகளுடன், ரம்பை, திலோத்தமை, மேனகை, ஊர்வசி ஆகிய தேவ மாதர்களைச் செதுக்கினான் மாதவன். பிரகாரத்தின் பாதியளவிற்குச் சிற்ப வேலைகள் முடிந்தவுடன், அரசன் அவைகளைப் பார்வையிட வந்தான். தேவமாதர்களின் சிலைகளைக் கண்டவுடன், அரசனுடைய முகம் சிவந்தது. புருவங்கள் நெற்றிக் கேறின; மீசை துடித்தது; கண்கள் அனலைக் கக்குவது போல விழித்தன. அருகில் நின்ற மாதவனைக்

கரகரவென்று இழுத்துக்கொண்டு ஒரு தனி யிடத்திற்குச் சென்றான்.

மிகுந்த கோபத்துடன், "ரம்பை, ஊர்வசி, மேனகை, திலோத்தமை எல்லோருமே கனக வல்லியின் உருவத்தோடு தானிருக்கிறார்களா?" என்று கேட்டான்.

"அரசே, மன்னிக்கவேண்டும். நான் எவ் வளவுதான் முயன்றாலும் கனகவல்லியின் உரு வத்தைத் தவிர வேறு உருவத்தை என்னால் செதுக்க முடியவில்லை. வேறு உருவம் என் மனதில் பதிய மறுக்கிறது. மனதில் பதிந்ததைத் தான் என் உளி செதுக்குகிறது."

"மாதவா, யாரிடம் நீ வார்த்தையாடுகிறாய் என்பதை மறந்து விட்டாய்! மனமாம்! உருவ மாம்! நன்றாயிருக்கிறது. உன் மனதைத் திருப்ப நான் வழி காட்டுகிறேன்."

"அந்த வழியை நான் ஏற்கத் தயாராக இருக்கிறேன், அரசே!"

"இது முதல் நீ செதுக்கும் சிலைகளில் கனக வல்லியின் சாயல் சிறிதேனும் காணப்பட்டால், உன் தலை இவ்வாளுக்கு இரையாகும். இதுவே நான் காட்டும் வழி!"

"அப்படியானால், கனகவல்லியின் உரு வத்தை என் மனதிலிருந்து அகற்றுவதற்குப்

போதிய அவகாசம் கொடுங்கள். அதன் பின்பு சிற்பங்களைச் செதுக்க ஆரம்பிக்கிறேன்.''

"மாதவா, முழு மனதுடன் முயற்சித்தால், எத்தகைய ஆசையையும் மனதிலிருந்து அகற்றி விடலாம்! அதற்குவேண்டிய மனோவலிமையைக் கடவுள் உனக்கு அளிப்பார்.''

மாதவன் அரசனிடம் விடைபெற்றுக் கொண்டு சென்றான். அதன் பின்பு ஆறுமாத காலமாக மாதவனை யாருமே பார்க்கவில்லை. மாதவனைக் காண வேண்டுமென்று அரசன் துடித்துக் கொண்டிருந்தான். அவனைக் கண்டு பிடிப்பதற்காக அரசன் பல ஒற்றர்களை அனுப்பி வைத்தான். சென்ற ஒற்றர்களின் முயற்சி எல்லாம் வீணாயிற்று. கிருஷ்ணபுரத்தைச் சிலா பொக்கிஷமாக ஆக்க நினைத்த விமலாதித்யனது மனக் கோட்டை முற்றும் உருப் பெறாமல் நின்றது. உள் பிரகாரச் சிற்பங்கள் முடியாததால், வெளிப் பிரகாரச் சிற்ப வேலைகளும் அப்படியப்படியே நிறுத்தப்பட்டன. அரசனது உள்ளம், கலாதேவனது அம்சம் பெற்ற மாதவனையே நினைத்து நினைத்துப் புண்பட்டுக் கொண்டிருந்தது.

திடீரென்று மாதவன் ஆதிச்சநல்லூர்ப் பரும்பிலுள்ள குகை ஒன்றில் இருப்பதாக ஒரு ஒற்றன் அரசனிடம் வந்து கூறினான். ஒற்றன் கூறிய செய்தி விமலாதித்யனுடைய காதுகளுக்கு

அமிர்த கானமாகவே இருந்தது. தன் குமாரி கனகவல்லியுடன் மாதவனைக் காண்பதற்காகப் புறப்பட்டு விட்டான் அரசன். மூவரும் ஆவலோடு குகைக்குள் நுழைந்தனர். மாதவன் அங்கு காணப்படவில்லை. ஆனால் அவர்கள், மாதவனுடைய சுதந்தரக் கைகள் செதுக்கிய கனகவல்லியின் சிலைகளைக் குகைச் சுவர் முழுவதிலும் கண்டார்கள். அந்தச் சிலைகள், தன்னைக் கண்டு நகைப்பது போலிருந்தது அரசனுக்கு. குகை உடனே மூடப்பட்டது.

சிற்பியின் இன்பக் கனவையும், அரசனுடைய பாழ்பட்ட லட்சியச் சின்னங்களையும் கிருஷ்ணபுரம் கோவில் உலகத்திற்கு இன்னும் பறையடித்துத் தெரிவித்துக் கொண்டிருக்கிறது.

---

# கலா சேவகி

லார்டு கார்வின், தெம்ஸ் நதிக்கரையில் இருந்த தன் பங்களாவின் மேல் மாடியில் உட்கார்ந்து, மனதைச் சிந்தனைக் கடலில் மூழ்க விட்டுக்கொண்டிருந்தார். அவர் வாயிலிருந்து சுருள் சுருளாக வந்துகொண்டிருந்த புகை, அவருடைய நெஞ்சில் ஏற்பட்ட ஏக்க அலைகளைப் போல் உயரச்சென்று வான வெளியில் கலந்து மறைந்தது.

கார்வின் இந்தியாவின் மாஜி வைஸ்ராய். அவரும் அவருடைய மனைவியும் இந்தியாவிலிருந்து லண்டனுக்கு வந்து ஒருவாரமாகிறது. தான் இளமைப் பருவத்தில் அந்தத் தெருவிலேயே பெரிய சாமர்த்தியசாலியென்று பெயரெடுத்திருந்ததையும், அதுகாரணமாகப் பின்பு இந்தியாவுக்கு வைஸ்ராயாக நியமிக்கப்பட்டதையும், அங்கே சுதேச மன்னர்களும் லக்ஷாதிபதிகளும் தன்னிடம் காட்டிய அபார மரியாதைகளையும் எண்ணி எண்ணிப் பெருமூச்சுவிட்டார்.

இந்தியாவில் அவருக்கென்று கட்டப்பட்டிருந்த மாளிகையும், தான் அங்கே செலுத்தி வந்த

அதிகார தோரணைகளும், அப்படியப்படியே அவர் மனக்கண்முன் காட்சியளித்தது. அவர் அவ்வளவு அக்கிரமங்கள் செய்திருந்தும், லண்டனுக்குப் புறப்பட்டபோது கும்பல் கும்பலாய் துறைமுகத்துக்கு வந்து வழியனுப்பிய இந்தியர்களின் மனப்பான்மையை அவரால் நன்கு அறிந்துகொள்ள முடியவில்லை.

அவர் வேலைபார்த்த ஐந்து வருஷங்களும் ஐந்து நிமிஷங்களாகப் பறந்துபோய் விட்டது போல் அவருக்குத் தோன்றியது. அதிர்ஷ்ட தேவதை இன்னும் சில காலத்துக்குத் தன்னை அந்தப் பதவியில் வைத்திராததைக் குறித்து லார்டு கார்வினுக்கு மிகுந்த வருத்தம். மறுபடியும் அதே பதவிக்கு வரலாம் என்ற நம்பிக்கை அவருடைய வருத்தத்தை ஒருவாறு தணித்தது.

தான் ஊரில் இல்லாதபோது தன் வீட்டையும் தாயாரையும் ஜாக்கிரதையாகக் கவனித்து வந்த மிஸ் மோரிஸின்மேல் அவருக்கு மிகுந்த பிரியம் உண்டாயிற்று. அவளுக்கு மாதாமாதம் சம்பளம் கொடுத்து வந்தபோதிலும் மேற்கொண்டு ஏதாவது ஒரு பெரிய உதவியைச் செய்ய எண்ணினர் கார்வின். ஆனால் நெற்றி வியர்வை நிலத்தில் விழ விருந்துக் கச்சேரிகளிலும், முடிசூட்டு விழாக்களிலும், அஸ்திவாரக் கல் நாட்டு விழாக்களிலும், சுற்றுப் பிரயாணங்களிலும் ஐந்து வருஷத்தைக்கழித்துப் பாடுபட்டு இந்தியாவில் சம்பாதித்த பொருளைக்கொண்டு

அவளுக்கு உதவி செய்ய அவர் மனம் இடங் கொடுக்கவில்லை. தன் கைச் செலவில்லாமலே தன்னுடைய பெயரால் அவளுக்கு உபகாரம் செய்யக்கூடிய வழி ஒன்றை யோசித்துப் பார்த் தார் அவர்!

மிஸ் மோரீஸுக்கு வயது இருபதுக்கு மேலிருக்கும். இளமையிலேயே தரித்திர தேவதை அவளைப் பிடித்துக்கொண்டதால் கலா தேவதையும் செளந்தரிய தேவதையும் அவ ளிடம் கருணைகாட்ட முடியாது போயிற்று. அதுகாரணமாகவே அவள் இதுவரை கலியாணம் ஆகாமல் கார்வின் குடும்பத்தில் வேலைக்காரியாக இருந்து வந்தாள். கைநிறையப் பணம் இருந்தால் லண்டன் நகரில் காதலன் கிடைப்பது கஷ்டமல்ல என்பது அவளுக்குத் தெரியும். எப்படியாவது பணத்தைச் சேர்த்துக் கலியாணம் செய்துகொண்டு தனியாக வாழ வேண்டுமென்று நினைத்து அதற்கு வேண்டிய முயற்சிகளை செய்து வந்தாள் மிஸ் மோரீஸ். இதுவரை சம்பளத்திலிருந்து முன்னூறு பவுன் வரை சேர்த்து வைத்திருந்தாள். குறைந்தது ஆயிரம் பவுனாவது இருந்தால்தான் அவள்மீது ஒருவனுக்குக் காதல் உண்டாகும். என்ன செய் வது? தன் எஜமானனிடம் தன் விருப்பத்தைத் தெரிவித்துப் பொருளுதவி கேட்க சமயம் பார்த் துக் கொண்டிருந்தாள்.

மோரீஸைப்பற்றிய யோசனையில் ஆழ்ந் திருந்தார் கார்வின். அப்போது அவள் அவர்

எதிரே இருந்த கண்ணாடித் தம்ளரில் பிராந்தியை ஊற்றிக்கொண்டிருந்தாள். அவளுடைய பணிவும் கவலை நிறைந்த முகம் கார்வினுடைய உள்ளத்தில் இரக்க உணர்ச்சியைத் தூண்டி விட்டது.

"மோரீஸ், ஏன் மிகவும் கவலையோடிருக்கிறாய்?" என்று கேட்டார். அவள் சிரித்துக் கொண்டே, "தங்களுடைய வேலைக்காரியாக இருக்கும்போது எனக்குக் கவலையேது?" என்றாள்.

அவள் சொன்ன தாழ்மையான பதில் கார்வினுடைய உள்ளத்தை அப்படியே குளிரச் செய்து விட்டது.

"நீ சொல்லாவிட்டாலும் உன்னுடைய கவலைகளை நான் அறிந்து கொண்டேன். அவைகளை நீக்க ஒரு வழி செய்கிறேன். நான் சொல்கிறபடி செய்தால், நீ லண்டன் நகரத்திலுள்ள சீமாட்டிகளோடு சரி சமானமாக வாழவும் இஷ்டப்பட்ட கணவனை மணந்து கொள்ளவும் கூடும். என்ன சொல்கிறாய்?"

"தங்கள் உத்தரவை நான் எப்போதாவது மீறியது உண்டா? தங்கள் சித்தப்படியே செய்கிறேன்."

"அப்படியானால் நீ இன்னும் இரண்டு வாரத்தில் இந்தியாவிற்குப் புறப்படத் தயாராக

இரு. பிரயாணச் செலவிற்குமட்டும் நூறு பவுன் எடுத்துக்கொண்டு போனால் போதும். நாளை சாவகாசமாக நீ இங்கே வா. இந்தியாவில் இன்னின்ன செய்ய வேண்டும், யாரிடம் எப்படிப் பேச வேண்டுமென்பதை விபரமாகச் சொல்லி வைக்கிறேன். இரண்டு மாதத்தில் நீ அங்கிருந்து மிகுந்த செல்வத்தோடு திரும்பி விடலாம். ஒன்றும் யோசியாதே. அதிர்ஷ்ட தேவதை உன்மீது பரிபூரண கருணை காட்ட உத்தேசித்திருப்பதால்தான் எனக்கு இந்த உபாயம் தோன்றியது."

மோரீஸ் அங்கிருந்து போய் விட்டாள். அவளுடைய மனதில் ஆனந்தம் பொங்கியது. தன்னுடைய எதிர்கால வாழ்க்கையைக் கற்பனை பண்ணிக்கொண்டே தன் வீடு போய்ச் சேர்ந்தாள். கார்வின் இந்தியாவிலிருந்து வந்த பிறகு அவருடைய நிலைமை எப்படி உயர்ந்துவிட்டதென்பதைக் கண்ட அவளுக்கு அவர் சொன்னதில் நம்பிக்கை ஏற்பட்டது.

* * *

தினமும் கார்வின் பக்கத்திலேயே உட்கார்ந்து அவர் சொல்லிக்கொடுத்த பாடங்களை நன்றாகப் பாடம் செய்துகொண்டாள் மோரீஸ். அவள் இந்தியாவிற்கு புறப்படவேண்டிய தினத்திற்கு முதல்நாள், இந்தியர்களிடம் அவள் நடத்த விருந்த நாடகத்தை ஒத்திகைபோட்டு பார்த்துக் கொண்டார் கார்வின். அதில் அவள் காட்டிய

நடிப்புத் திறமையைக் கண்டு தன்னுடைய யுக்தி அப்பொழுதே பலித்துவிட்டதாக எண்ணினார் அவர். இந்தியாவிற்குப் புறப்படவிருந்த 'ரோக்' என்னும் கப்பலில் மிஸ் மோரீஸ் ஏறிக்கொண்டாள். அவளை வழியனுப்ப வந்த கார்வின் "கர்த்தர் உனக்கு வெற்றியளிக்கட்டும்" என்று ஆசீர்வதித்து விட்டு நாடகத்தின் சூத்திரக் கயிற்றை இயக்குவதற்காக வீட்டுக்குப்போய்ச் சேர்ந்தார். சமுத்திரத்தில் எழுந்த ஒவ்வொரு அலைகளும் "வெற்றி வெற்றி" என்று ஒலிப்பது போல இருந்தது மோரீஸுக்கு. இவ்வளவிற் செல்லுங் கொல்! இவ்வளவிற்காணும் கொல்! இவ்வளவிற் காதல் இயம்பும் கொல்!" என்று, தான் இந்தியாவில் ஒவ்வொரு நாளிலும் செய்ய வேண்டிய காரியங்களுக்குக் குறிப்பெழுதிக் கொண்டிருந்தாள்.

கப்பல் பம்பாய்த் துறை முகத்தையடைந்ததும் கார்வின் சொல்லியிருந்தபடி மோரீஸை வரவேற்பதற்காக ஒரு மாபெரும் கூட்டம் வந்திருந்தது. இந்தக் கூட்டம் அவள் எதிர் பார்த்திருந்ததைவிடப் பத்துமடங்கு அதிகமாயிருந்தது. அதில் கரோடா மகாராஜாவும், அகில இந்திய கலாசேவக சங்கத்தின் தலைவரும் முக்கியமானவர்கள்.

மிஸ் மோரீஸை மகாராஜாவும், சங்கத் தலைவரும் மாலையிட்டு வரவேற்றார்கள். மகாராஜா வேண்டிக்கொண்டபடி அவள் அவருடைய மாளிகையிலேயே தங்க நேரிட்டது.

சங்கத்தலைவர், பிரதான நகரங்களில் மிஸ் மோரீஸின் பிரசங்கங்கள் நடத்துவதற்கான ஏற்பாடுகளைத் தீவிரமாகச் செய்துகொண்டிருந்தார். இதற்கிடையில் மகாராஜாவும் மோரீஸ் அம்மையாரும் அஜந்தா குகை, அரித்வார் க்ஷேத்திரம், வங்க ஓவியச் சாலைகள் ஆகிய கலா நிலயங்களைப் பார்வையிட்டு வந்தார்கள். இடையிடையே "ஆஹா! என்ன நேர்த்தி! இதனால் தான் ஆங்கிலேயர்கள் தங்கள் உயிரைக் கொடுத்தாவது இந்த நாட்டைக் காப்பாற்றி வருகிறார்கள்" என்று சொல்வதும் டைரியில் ஏதேதோ குறிப்புகள் எழுதுவதுமாக இருந்தாள் மிஸ் மோரிஸ்.

இந்தியாவின் தலைநகரமாகிய டில்லியில் அம்மாளின் பிரசங்கம் ஒன்று நடைபெற்றது. அவள் பேச்சைக் கேட்டு அனுபவித்த சுதேச மன்னர்களும், கலா நிபுணர்களும் அப்படியப்படியே ஸ்தம்பித்து தாங்கள் இருந்த இடத்திலேயே தூங்கிவிட்டார்கள்.

கூட்டம் முடிந்ததும் தோல்வார் மகாராஜா அம்மையாரைத் தன் ராஜயத்திலுள்ள சிற்பக் கலைகளின் மேன்மையை வந்து பார்த்து அனுபவிக்கும்படி கேட்டுக்கொண்டார். அம்மையாரும் அவருடைய வேண்டுகோளை மறுக்க முடியாமல் கரோடா மகாராஜாவிடம் அனுமதி பெற்றுக்கொண்டு தோல்வாருக்குப் போய்ச்சேர்ந்தாள்.

இதற்கிடையில் . அம்மையாரின் இந்திய விஜயத்தைப் பற்றிப் பத்திரிகைகளெல்லாம் வெளுத்து வாங்கிக்கொண்டிருந்தன. ஒரு பத்திரிகை விட்டிருந்த சரட்டிலிருந்து மற்றப் பத்திரிகைகள் கயறு திரித்து அவளுடைய சரித்திர வரலாறுகளைப் பத்தியத்தியாக எழுதித் தள்ளின.

ஒருவர் அம்மையாரின் வாழ்க்கைச் சரித்திரம் எழுத, ஒரு புத்தகக் கம்பெனியை ஆரம்பித்தார். அச்சாபீஸ்களுக்கு வேலை அதிகமாயிற்று. தமிழ் நாட்டுப் பத்திரிகை ஒன்றில் பின் கண்டவாறு மிஸ் மோரிசைப்பற்றி எழுதப் பட்டிருந்தது.

" கலையிலே பிறந்து, கலையிலே தவழ்ந்து கலையிலே மூழ்கி கலையிலே வாழ்ந்து கலைக்காகவே உடல் பொருள் ஆவி மூன்றினையும் அர்ப்பணம் செய்துவிட்டு வரும் மிஸ் மோரீஸ் அம்மையார், கேவலம் நம் நாட்டு அரசமரத்துப் பிள்ளையாரை பார்த்து அப்படியே சொக்கி நின்றுவிட்டாரென்றால் மற்றச் சிற்பங்களைப் பற்றி அவர் எப்படி அனுபவித்திருப்பாரென்பது ஊகித்தறிந்துகொள்ளக்கூடிய விஷயம்.

"கலைகளைப்பற்றிய விஷயங்களைச் சேகரிப்பதில் மட்டிலும் அம்மையார் மாதம் ஒன்றுக்கு 100,000ரூபாய் வரை செலவழித்து வருகிறாராம். இந்தியர்களிடம் கலைச்செல்வம் இருக்கிறது;

ஆனால் ரஸிகத்தன்மை இல்லை என்பதற்குவேறு அத்தாட்சி வேண்டுமா? அம்மையாரின் சுற்றுப் பிரயாணத்திற்குப் பின்பாவது நமது ஜனங்கள் விழித்தெழுவார்களா? அல்லது தூங்கத்தான் போகிறார்களா? அம்மையார் எழுதப்போகும் "உலகக் கலைப்பொக்கிஷம் என்னும் நூலில் இந்தியச் சிற்பமே முதன்மை ஸ்தானம் வகிக்கும் என்பதில் சற்றும் சந்தேகம் இல்லை"

தோல்வார் தேசத்திலுள்ள சகல கலைகளை யும் அம்மையார் பார்த்து அனுபவித்துக் குறிப்பு கள் எழுதிக்கொண்டு அங்கு இரண்டொரு நாள் தங்கியிருந்தார். பின்பு பல இடங்களுக்குச் சுற்றுப்பிரயாணம் செய்து விட்டு கரோடாவிற்கு வந்து சேர்ந்தார். அங்கே இரவும் பகலும் மகாராஜாவுடன் இந்தியக் கலைகளைப்பற்றியே பேசித் தன் உற்சாகத்தை காட்டிக்கொண்டிருந்தார். அவ்வாறு ஒருவாரம் சென்ற பின் லண்டனி லிருந்து ஒரு அவசரத் தந்தி வந்தது. மிஸ் மோரிஸை உடனே வந்து விட்டுப்போகும்படி அதில் எழுதியிருந்தது.

கரோடா மகாராஜாவிடம், தான் எந்த விதத்திலும் இரண்டு மாதத்தில் திரும்ப வந்து சேர்வதாக வாக்களித்து விட்டுக் கப்பலேறினாள். தோல்வார் மகாராஜாவுக்கும் அவ்வாறே கடிதம் எழுதிவிட்டாள்.

மேற்கூறிய சம்பவங்கள் நடந்து ஆறுமாதங் களுக்குப் பின்பு லண்டனிலுள்ள 'மோரீஸ்

வில்லா,' என்னும் பெரிய பங்களாவின் மேல் மாடியில் மோரீஸும் அவள் கணவன் வில்ஸனும் எதிரெதிரே நாற்காலிகளில் அமர்ந்து கொண்டிருந்தார்கள். மோரீஸ் தன் இந்தியப் பிரயாணத்தைப் பற்றி மூன்று நாட்களாகப் பேசியும் இன்னும் பேச்சு முடியவில்லை.

"பிரயாணத்தின் முக்கியமான பாகத்தை இன்றுதான் சொல்லப்போகிறேன்" என்றாள் மோரீஸ்.

"அதென்ன? இவ்வளவு நாளாகச்சொன்னதையே திரும்பக்கேட்க வேண்டும்போல் அவ்வளவு ரசமாக இருந்ததே. இன்னும் இதைவிட முக்கியமான விஷயம் என்ன இருக்கிறது?" என்று ஆச்சரியத்தோடு கேட்டான் அவள் கணவன் வில்ஸன்.

"இந்த மூன்று காதல் கடிதங்களையும் படித்துப்பார். பிறகு அதன் விஷயத்தைச்சொல்கிறேன்" என்றாள். வில்ஸன் அவைகளைப்படித்துவிட்டு "அடடா! காதல் கடிதங்களா! சரி சரி சீச்சீ! இந்த மூன்று பேரும் சரியான மடையர்கள் தான். விஷயத்தை விவரமாகச்சொல்" என்று இன்னொரு சிகரட்டைப்பற்ற வைத்தான்.

"இதோ இருக்கிறதே இந்தக் கடிதத்தை எழுதினவர் கரோடா மகாராஜா. சொத்து ஏராளம். இவரிடம் இரண்டொரு காதல் வார்த்தைகளைச் சொல்லிவிட்டு 'நான் தமிழ் நாட்டு

ஸ்திரீகளைப்போல் ஆபரணம் போட்டுக்கொள்ள ஆசைப்படுகிறேன்' என்றேன். அவ்வளவுதான். இவர் தலைமுதல் கால் வரை என்னை வைரமும் தங்கமுமாக மாட்டி எனக்குப் பெரிய சுமையை உண்டு பண்ணி விட்டார். அந்த நகைகளைக் கழட்டாமலே நான் இங்கே வந்துவிட்டேன். அவர் அதைப்பற்றி ஒரு வார்த்தைகூட எழுத வில்லை. அவருக்கு என் காதல் வேண்டுமாம். நான் திரும்ப அங்கு வந்து சேர வேண்டுமாம். எப்படியிருக்கிறது இந்த முதல் மடையன் எண்ணம்?''

''இரண்டாவது கடிதத்தை எழுதியவர் தோல்வார் மகா ராஜாவாம். சரியான பைத்தியக் காரன் வயது எழுபதுக்குமேல் ஆகிவிட்டது. முதலில் அவர் என் மீது அவ்வளவு பிரியத்தோடு பேசவில்லை, 'நான் இந்தியாவிலேயே, ஏன், உங்களோடேயே வசித்துக்கொண்டு இருந்து விட எண்ணுகிறேன்' என்று நான் சொன்னது தான் தாமதம், மனுஷனுக்கு உச்சியில் ஐஸ் கட்டியால் அடித்தது போலாகிவிட்டது. 'உங் களைக் கல்யாணம் செய்து கொண்டு வாழ்வது எனக்கு அதை விடப்பிரியம் தான். ஆனாலும் உங்களுக்கு இதற்கு முன்னாலேயே கலியாணம் ஆகியிருக்கலாம். தாங்கள் சம்மதித்தால் என்னை யும் மணம் செய்து கொள்ளலாம்' என்றேன். அவர் திடுக்கிட்டுத் தன் பொக்கை வாயைத் திறந்து, 'நிஜமாகவா?' என்றார். எனக்கு அப்

பொழுது பொங்கிக்கொண்டு வந்த சிரிப்பை எவ்வளவு கஷ்டப்பட்டு அடக்கிக்கொண்டேன் தெரியுமா?"

"கிழவன் நான் சொன்ன நிபந்தனைகளுக்கெல்லாம் சம்மதித்தார். லண்டனில் என்னுடைய கணவன் இருப்பதாகவும், அவனுக்கு இருபதினுயிரம் கொடுத்து விவாக ரத்துச் செய்துகொண்டு அங்கே வந்துவிடுவதாகவும் சொன்னேன். உடனே கிழவன் முப்பதினுயிரம் ரூபாயை என் கையில் கொடுத்து 'இன்னும் தேவையிருந்தால் தெரிவி. அனுப்புகிறேன்' என்ருன். இந்த மடையனும் என்னை வரும்படியாகத்தான் எழுதியிருக்கிருன்.

"தோல்வார் தேசத்து இளவரசன் தான் இந்த மூன்ருவது கடிதத்தை எழுதியிருக்கிருன். இரண்டாவது கடிதத்தை எழுதின கிழவனின் மகன் இவன். கிழவன் இல்லாத சமயங்களில் இவனுடைய காரில் ஏறிக்கொண்டு சமுத்திரக் கரையில் போய் இவனேடு பேசிக்கொண்டிருந்தேன். இவன் விஷயத்தில் நாஞக ஒன்றும் சொல்லவில்லை. தாஞகவே காதல் பேச்சை ஆரம்பித்து, 'மிஸ் மோரீஸ், உன்னைத் தோல்வார் தேசத்து மஹாராணியாக்கி விடுகிறேன்' என்று முடித்தான். அப்போது இவன் முகத்தைப் பார்க்கவேண்டுமே! 'உங்களைவிட எனக்குதான் இந்த விஷயத்தில் அதிக அக்கரை. இருந்தாலும் லண்டனில் எனக்கு 50,000 ரூபாய்

வரை கடன் இருக்கிறது. அதைத் தீர்த்துவிட்டு வந்து உங்களை மணந்துகொள்கிறேன் என்றேன். 'ஏன் இதை முன்னமேயே தெரிவித்திருக்கக் கூடாதா? கடன் காரர்களுக்கு இங்கிருந்தே பணம் அனுப்பியிருக்கலாமே!' என்ருன்.

"நான் போய்த்தான் அவைகளைத் தீர்க்க வேண்டியிருக்கிறது. பல பேருக்குக் கொடுக்க வேண்டியிருக்கிறது. ஞாபகப்பிசகால் ஒருவருக்கு அனுப்பாமல் இருந்துவிட்டால் அவர்கள் அங்கிருந்து என்மீது வழக்கு தொடர்ந்து வந்தால் அப்புறம் உங்களுக்குத்தானே அவமானம்' என்றேன். அன்றிரவே ஒருவருக்கும் தெரியாமல் ரூபாய் ஐம்பதினுயிரத்தையும் என் கையில் கொடுத்தனுப்பினுன் இந்த மூன்ருவது மடையன்" என்ருள்.

மோரீஸ் கடிதங்களின் விபரத்தை சொல்லி முடித்ததும், "ஆமாம் இவர்களுக்கு உண்மையைத் தெரிவித்துப் பதில் எழுதிவிட்டாயா? இல்லையா?' என்ருர் வில்ஸன் துரையவர்கள்.

"பதிலாவது மண்ணுங்கட்டியாவது; பதில் எழுதிவிட்டால் அவர்கள் மனம் ஒருவேளை நிம்மதியடைந்துவிடுமே! இவர்கள் சாகும்வரை என்னைப்பற்றியே எண்ணி எண்ணி ஏங்கிக் கொண்டிருக்க வேண்டுமானுல் நான் பதில் எழுதவே கூடாது. எனக்கு பணம் கொடுத்ததாக இவர்கள் வழக்குத் தொடரவும் முடியாது.

ஆகவே திருடனைத் தேள் கொட்டியதுபோல இவர்கள் மனம் புழுங்கிச் சாகட்டும்" என்றாள் மோரீஸ். அவளுடைய கணவன் தன் மனைவியின் புத்திசாலித் தனத்தையும் லார்டு கார்வினுடைய மூளையையும் வியந்து சிரித்தான்.

அப்போது அந்த மங்கிய மாலைப்பொழுதில் வானம்பாடியொன்று மேற்குநோக்கிப் பறந்து சென்றது. அதன் பின்னால் மூன்று மைனாக்களும் அதை எட்டிப் பிடிப்பதுபோல பறந்து போய்க் கொண்டிருந்தன.

# 3. திரு(ட்டு) விளையாடல்

மாலை மணி நாலரை. "கண-கண கண...கணு".

பள்ளிக்கூடத்து வாசலில் ஒரே கும்பல். சந்தை இரைச்சல்போல ஆரவாரம். கும்பலின் நடுவில் சோமு, தன் கூட்டாளி ராமுவுடன் குதூகலமாய்ப் பேசிக்கொண்டு வருகிறான். சோமுவுக்கு வயது எட்டு. ராமுவுக்கு ஒன்று கூடவிருக்கலாம். கோபத்துடன் ஆட்டப்படும் குழந்தையின் தொட்டிலைப்போல சோமுவின் கையிலுள்ள புஸ்தகப்பை அங்குமிங்கும் போய் காற்றில் மோதி வீசுகிறது. ராமுவின் குடையும் அதே கஷ்டத்தை அனுபவிக்கிறது. அவர்கள் தங்கள் வகுப்பில் ஆரம்பிக்கப்பட்ட சம்பாஷணையைத் தொடர்ந்தார்கள்.

## விதை போட்ட படலம்

"அது தாண்டா சரியான வழி" என்றான் ராமு. சோமு விழித்தான். "சீச்சீ. எங்கப்பா பார்த்துவிட்டா அடிப்பாருடா" என்றான்.

"போடா, போ. தெரிஞ்சாத்தானே அடிப்பாரு! எடுக்கிறது ஒருத்தருக்குமே தெரியக் கூடாது. உங்கப்பா தினம் எண்ணி எண்ணியா

பாக்கராரு? இல்லேன்னு பந்து எப்படிடா வாங்க முடியும்? நீதானே பந்து வாங்கணும்னு சொல்றே."

"எங்கப்பா, வீட்டிலே வச்ச ரூவாயெக் கணக்கே பாக்கிறதில்லேத்தான். ரூவா கொறஞ் சிருந்தாலும் அம்மா எடுத்துச் செலவழிச்சிருப் பான்னு தான் நெனச்சுருப்பாரு. இருந்தாலும் ரூவாயெ எடுத்துகிட்டு இருக்கையிலே மாமா கீமா திடீர்னு வந்துட்டா என்ன செய்கிறது? அதுக்குத்தான் பயப்படறேன்"

"பகல்லே தாண்டா யாரும் வருவாங்க. நடு ராத்திரிலே எந்திரிச்சு, அலமாரியெ மெதுவாத் திற. ஒரு ரெண்டு ரூவா மட்டும் எடுத்துக்கோ. மணிபாக்லை இருந்தபடியே வச்சிட்டு வந்து படுத்துக்கோ. அவ்வளவுதான். என்ன? நான் சொல்றது நல்ல யோசனைதானே? அப்படியே செஞ்சுபோடு. காலம்பரக் கடையிலே போய் பந்தும் காத்தடிக்கிற பம்பும் வாங்கிட்டு வந்துட லாம். எங்க வீட்டிலே அந்தமாதிரி பணம் இருந்தா நான் இப்படியா பயப்படுவேன்?"

சோமு யோசனை பண்ணினன். அவனு டைய குழந்தை முகத்தின் சோபை மாறிற்று. பிறகு "அப்படின்னு ராத்திரி பன்னிரண்டு மணி வரைக்கும் முழுச்சுகிட்டே இருக்கணும்போ லிருக்கே! எனக்குத்தான் எட்டு மணிக்கே தூக்கம் வந்துடுமே, என்ன செய்கிறது?" என்ருன்.

" அடேயப்பாடி! இன்னக்கி ஒரு நாளும் கொஞ்சம் தூங்காமே இருக்க முடியாதாடா? பந்து வாங்கணுமா வேண்டாமா?" என்று கடைசிப் பாணத்தைப் போட்டான் ராமு. பாணமும் பாய்ந்து விட்டது.

"சரி, சரி, எப்படியாவது எடுத்துக்கிட்டு வந்திடறேன். நாளைக்கிக் கட்டாயமா மாந் தோப்புலே பந்து விளையாடணும். தெரியுமா!" என்ருன் சோமு. ராமுவுக்கு சந்தோஷம்.

இதற்குள் இருவரும் வீட்டையடைந்து விட்டார்கள். சோமு தன் நண்பனைப் பிரிந்து வீட்டுக்குப் போனுன்.

## வேரூன்றின படலம்

சோமு அன்று சாயங்காலம் பூராவும் வெளி யிலேயே போகவில்லை. மறுநாள், தான் விளை யாடப்போகும் பந்தாட்டத்தைப்பற்றி யோசித் துக்கொண்டிருந்தான். தன்னுடைய மகன் ஒரு மாதிரியாயிருப்பதைக்கண்ட சோமுவின் தாயார் "ஏண்டா சோமு, ஏன் இப்படியிருக்கிருய்? வாத்தியார் அடித்தாரா? ஒருவர் கூடவும் பேசா மல் 'உம்' மென்றிருக்கிருயே?! தினமும் பள்ளிக் கூடத்திலிருந்து வந்தவுடன் குழந்தையோடு கொஞ்சிக் கொண்டிருப்பாயே!" என்று கேட் டாள்.

"சார் என்னை ஏம்மா அடிக்கப்போருரு? நான் என்ன, துஷ்டப் புள்ளையாம்மா?" என்ருன் சோமு. அவனுக்கு என்னவோ போலிருந்தது.

"சரி, சமையலறையில் காப்பிவைத்திருக்கிறேன். ஆறிப்போறதுக்கு முன்னுலே போய்க் குடி" என்று சொல்லி விட்டுத் தாயார் வெளியே போனுள்.

## மந்திராலோசனைப் படலம்

சோமு சமையலறைக்குள் சென்ருன். டம்ளரிலிருந்த காப்பியில் பாதியைக் குடித்தான். மீதியை அப்படியே வைத்து விட்டுத் திண்ணையில் வந்து உட்கார்ந்தான். அவனுடைய இளமுகம் சுருங்கிற்று. அவனுடைய சின்ன நெஞ்சிலே என்னென்னவோ யோசனை யெல்லாம் ஓடிற்று. அப்போது அவனுடைய இரண்டு வயது தம்பி அவன் மடிமீது ஏற முயற்சி செய்தான். சோமு அவனை ஒரு அடி கொடுத்துக் கீழே இறக்கிவிட்டான். அடி லேசானதுதான். ஆனுல் அது வெறுப்புடன் கூடியது. இதற்கு மூன் சோமு இதைவிடப் பலமாக ஸ்வாதீனமாக அடித்ததுண்டு. அதெற்கெல்லாம் சிரித்துக் கொண்டிருக்கும் குழந்தை இந்த அடி பொறுக்க முடியாமல் வீறிட்டழுதுகொண்டு உள்ளே போய் விட்டது. அது தன் தாயை கண்டதும் ஓயாமல் கத்த ஆரம்பித்தது. அழுதுகொண்

டிருந்த குழந்தையைத் தாயார் சோமுவிடம் கொண்டு போய் விட்டாள். ஆனால் அது அவனிடம் போகப் பயந்தது.

வீட்டில் விளக்கேற்றியாய் விட்டது. இன்னமும் சோமு திண்ணையை விட்டு எழுந்திருக்கவில்லை. "அடே சோமு, விளக்கேற்றியது தெரியவில்லையா? பாடம் கீடம் படிக்க வேண்டாமா? ஏன் இப்படி அசமந்தமா, பிடித்து வைத்த பிள்ளையாரைப்போல உட்கார்ந்தே இருக்கிறாய்? போய்ப் படிடா" என்று அவன் தாய் சற்றுக் கடுமையான குரலில் சொன்னாள்.

சோமு வேண்டா வெறுப்புடன் புஸ்தகத்தை எடுத்தான். ஏதோ ஒரு பக்கத்தைத் திருப்பிக்கொண்டு தீபத்தின் முன் அமர்ந்தான். எழுத்துக்கள் அவனுக்குப் புதிதாகத் தோன்றின புஸ்தகமோ சர்ப்பம்போல அவனுக்குக் காட்சியளித்தது. அவன் வாய் மாத்திரம் "ராமா இஸ் ஏ பாய், ஏ பாய் வாஸ் ராமா" என்ற வாக்கியங்களைத் திருப்பித் திருப்பிப் பாராயணம் பண்ணிக்கொண்டிருந்தது. அவன் கையில் பிடித்திருந்தது பூகோள சாஸ்திரம். அதற்கும் அவன் சொல்லிய வார்த்தைகளுக்கும் சம்பந்தமே கிடையாது. எப்படி ரூபாயை எடுக்கலாமென்று 'பிளான்' போட்டுக் கொண்டிருந்த அவன் மனது புஸ்தகத்தில் எப்படிப் பதியும்?

## நிகழ்ச்சிப்படலம்

சோமுவின் தாயார் தன் மகனுக்கு உடம்பு சரியாயில்லை என்று நினைத்தவளாய் "சோமு, தூக்கம் வந்தால் சீக்கிரம் சாப்பிட்டுவிட்டுப் போய்ப் படுத்துக்கொள்" என்றாள்.

சோமு புஸ்தகங்களைக் கட்டி வைத்தான். "அம்மா, எனக்கு இன்னிக்குப் பசியேயில்லை. சாதம் வேண்டாம். போய் படுத்துக்கொள்ளு கிறேன்." என்று சொல்லி விட்டு மாடிக்குப் போய்விட்டான். ரூபாயிருந்த அலமாரியினடியிலேயே படுக்கையை விரித்துப் படுத்துக்கொண்டான். அவனுக்குத் தூக்கமே பிடிக்கவில்லை. மாந்தோப்பு, பந்து, ரூபாய் ஆகியவைகள் அவன் மனக்கண்முன் கலந்து கலந்து வந்து தோன்றின. நேரமாக ஆக அவனுக்குப் பயம் அதிகரித்தது. வீட்டிலிருந்த கடிகாரத்தில் 'கணார் கணார்' என்று மணி பன்னிரண்டடித்தது. அந்த மணிச் சத்தம் சோமுவுக்குப் பயங்கரத்தை யுண்டு பண்ணிற்று. மேலும் மாடியினுள் எங்கும் ஒரே இருட்டு. இதற்கெல்லாம் பயந்தால் பந்து வாங்க முடியுமா? அவன் மனது தைரியமடைந்தது. வீட்டில் எல்லோரும் தூங்கி விட்டார்களென்பதைக் குறட்டைகளின் பல ஸ்வரக் குரல்களும், எலிகளின் திருவிளையாடல் சத்தங்களும் அறிவித்தன. வீட்டில் அலமாரியைப் பூட்டுவதே கிடையாது. சும்மா தான் சாத்தப்பட்டிருக்கும்.

சோமுவின் அதிர்ஷ்டவசமாக அந்த அலமாரி, திறக்கும்போதும், மூடும்போதும் 'கீச்' சென்று சத்தம் செய்வதில்லை.

மெதுவாகப் படுக்கையை விட்டெழுந்தான் சோமு. பதட்டத்துடன் அலமாரியைத் திறந்தது அவன் கை. மணிபர்ஸை எடுத்தான். அது கனமாகவிருந்தது. கீழே போட்டுவிட்டான். திரும்பவும் அதை எடுக்க முயன்றான். பழைய படியும் அவன் கையினின்றும் நழுவி விழுந்தது. கீழே உட்கார்ந்துகொண்டான். நடுங்கிக்கொண்டிருந்த அவனது சிறிய கைகள் அந்தப் பழைய மணிபர்ஸின் பொத்தானைத் திறக்கச் சக்தியற்றவையாகிவிட்டன. கடைசியில் எப்படியோ பர்ஸைத் திறந்துவிட்டான். பாம்புப் புற்றுக்குள் கைவிடுவதுபோல அதனுள் தன் வலதுகையை நுழைத்தான். அவனுடைய நெஞ்சு 'படபட' வென்று அடித்துக்கொண்டது. கையைப் பர்ஸி லின்றும் எடுத்துவிட முயன்றான். முடியவில்லை. அந்தச் சமயத்தில் யாரோ மாடிப்படிகளில் ஏறுவதுபோல் தோன்றிற்று. உடனே திக்பிரமையடைந்தவன்போல உருவாகச் சமைந்து நின்றுவிட்டான். பின்பு கொஞ்சம் தெளிந்து கையை விட்டான். கடைசியில் பர்ஸிலிருந்து மூன்று ரூபாயும் கொஞ்சம் சில்லரையும் எடுத்துக்கொண்டான். பணம் அவன் மடியில் பத்திரமாக முடிந்து வைக்கப்பட்டது. பர்ஸை முன்னிருந்தபடியே வைத்துவிட்டான். ஓசையில்லாமல் அலமாரியும் மறுபடி மூடப்பட்டது.

சோமு ரூபாயுடன் படுக்கையில் போய்ப் படுத்தான். இப்போதும் தூக்கம் வரவில்லை. தான் எடுத்தது தெரிந்துவிடுமோவென்று பயம். நெஞ்சு அடித்துக்கொண்டது. அநேக தடவை அலமாரியை நோக்கிச் சென்றான். ரூபாயைப் பழையபடி பர்ஸில் போட்டுவிடலாமா என்று தோன்றிற்று. ஆனாலும் அதற்கும் தைரியமில்லை. நல்ல காலமாக பணம் எடுக்கும்போதுதான் யாரும் பார்க்கவில்லை. திரும்பக் கொண்டு வைக்கும்போது யாராவது பார்த்துவிட்டால்! வேதனை பொறுக்காமல் எழுந்துஉட்கார்ந்துகொண்டான். பணத்தை ஒருதடவை தொட்டுப்பார்த்தான் திரும்பிவந்து படுத்துக்கொண்டான்.

அவனை ரொம்ப அலட்ட விரும்பாதது போல் இரவும் கழிந்தது.

மறுநாட்காலை சோமு வழக்கத்திற்குமாறாக எல்லோருக்கும் முன்னதாக எழுந்துவிட்டான். அப்போது அவனைப் பார்த்த அவன் தாயார் "என்ன! முகமெல்லாம் ஏன் இப்படிக் கனத்திருக்கிறது? நீ இன்று பள்ளிக்கூடம் போக வேண்டாம். வீட்டிலேயே இரு" என்றாள்.

ஆனால் சோமு அவசரமாக "எனக்கு ஒண்ணுமில்லையம்மா. ராத்திரி கொசுக்கடி. தூக்கமேவரலே. அதுதான் இப்படி இருக்கேன். சீக்கிரம் சாப்பிட்டுவிட்டு பள்ளிக்கூடம் போகணும்" என்றான்.

அந்தச் சமயத்தில் அவன் தந்தை வீட்டிற்குள் வந்தார். அவர் சோமுவை ஓர் முறை ஏற இறங்கப் பார்த்துவிட்டு "வெளியிலே அலேந்தாயா? இங்கே வா. மேல் காய்கிறதாவென்று பார்க்கட்டும்" என்று அவனைத்தன் பக்கத்தில் அழைத்தார்.

வாத்தியாரின் அருகே செல்லும், பாடம் தெரியாத மாணுக்கனைப்போல சோமு தன் தந்தையின் பக்கம் போனுன். அவன் உடம்பு சுடவில்லை. ஆனுல் முகத்தைப் பார்த்தார். "உனக்கு என்னப்பா உடம்புக்கு"? என்று அன்போடு கேட்டார். "ஒண்ணுமில்லையப்பா" என்ருன் சோமு. அவன் குரல் தடுமாறிற்று.

## வீழ்ச்சிப் படலம்

அவன் மனதில் என்னென்னமோ தோன்றியது. மடியிலிருந்த ரூபாய் திடீரென்று நழுவுவதுபோலத்தோன்றிற்று. உடனே ஒரு கையால் மடியைப் பிடித்துக்கொண்டான். தனக்கு உடம்புக்குவந்து விட்டதென்று இத்தனை கவலைப்படுகிருர்களே, அம்மாவும், அப்பாவும். எவ்வளவு நல்லவர்கள்! — அந்த ரூபாயை எடுக்கலாமா?— இப்படியெல்லாம் அவனுடைய குழந்தை மனது போராடியது.

இதற்குள் யாரோ "சாமீ" என்று கூப்பிடும் குரல் கேட்டு அவனுடைய தந்தை வெளியே போனுர். சோமு ஒன்றும் தோன்ருதவனுக நின்ருன்.

"இப்போது சில்லரையில்லை நோட்டாக இருக்கிறது. நாளைக்கு வா" என்று தகப்பனார் பால்காரனிடம் சொல்லும் குரல் கேட்டது. உடனே உள்ளதைச் சொல்லிவிடலாமா என்று நினைத்தான் சோமு.

பால்காரன் போய் விட்டான். அவனுடைய தாயாரின் குரல் கேட்டது.

"என்ன, எனக்கு ஒரு ரூவா வேணுமே. எண்ணைக்காரனுக்குக் கொடுக்கணும். ஒரு ரூபா கூட இல்லையா?"

"இல்லையே, இப்பத்தான் பாத்தேன். நூறு ரூபா நோட்டுத்தான் இருக்கு. வேறே சில்லரையே இல்லை."

சோமுவின் மார்பு அடித்துக்கொண்டது. அவனுக்கு மயக்கம் வருகிறாப்போல் இருந்தது. தான் எடுத்த ரூபாயின் மேல் வெறுப்பு ஏற்பட்டது. அதை அப்படியே எடுத்து வெளியில் வீசி விடலாமா என்று தோன்றிற்று. மேலும் தாயாரின் குரல் கேட்டது. கவனித்தான்.

"என்னது? நேற்று சாயந்திரம் செட்டியாருக்குப் பணம் கொடுத்தேன். பர்ஸில் மூணு ரூபா சில்லரை இருந்ததே!"

அதற்கு மேல் ஒன்றுமே சோமுவின் காதில் விழவில்லை. ஏதோ பித்துப்பிடித்தவன் போல

அலமாரியை நோக்கி ஓடினான். பர்ஸை எடுத்தான் ஆனால் அதற்குள் யாரோ வரும் சத்தம் கேட்டது. தான் எடுத்த அந்த 'பொல்லாத' ரூபாய்களை பர்ஸுக்கு அடியிலேயே வைத்து விட்டுத் திரும்பினான்.

## மீட்சிப் படலம்

அவன் அலமாரியை மூடுவதற்கும் அவன் தாயார் உள்ளே நுழைவதற்கும் சரியாயிருந்தது.

"என்னடா, பண்ணுகிறே? போய்ப்படுத்துக்கச் சென்னேனே" என்று சொல்லிக் கொண்டே தாயார் அலமாரியை நெருங்கினாள். சோமு வெளியே ஓடினான்.

போகும்போதே அம்மா அப்பாவிடம் சொல்லுவது அவனுடைய காதில் விழுந்தது; "பணம் இல்லையென்னிங்களே. இதோ அலமாரியிலேயே கீழே கிடந்தது. நீங்கள் சரியாப்பார்க்கலே."

சோமுவின் மனம் நிம்மதி யடைந்தது. அவனுடைய நெஞ்சில் அழுத்திக் கொண்டிருந்த ஒரு பாரம் நீங்கிவிட்டது.

# பானுமதி

பானுமதி சுந்தரகுமார பாண்டியனுடைய ஒரே மகள். ரூபலாவண்யத்தில் அவளை மிஞ்சக் கூடிய பெண் அக்காலத்தில் ஒருவருமில்லை. அவளை அவளுடைய மாமன் மகன் விமலநாதனுக்கே மணம் முடிக்க வேண்டுமென்று, அவர்கள் இருவரும் சிறு வயதாக இருக்கும்போதே எல்லோரும் தீர்மானித்திருந்தார்கள்.

பானுமதிக்குப் பதிமூன்று வயதானபோது அவளுடைய குரு வாணிதாசர் திடீரென்று இறந்து விட்டார். இறப்பதற்கு முன் அவர் பானுமதியிடம் ஒரு வாக்குறுதி பெற்றுக் கொண்டார். அதன்படி சித்திரக் கலையில் கைதேர்ந்த ஒருவனையே அவள் மணம் செய்து கொள்ள வேண்டும். பானுமதி சித்திரக் கலையில் உள்ள இன்பத்தை நன்ருக அனுபவிப்பதற்கு அதுவே சிறந்த வழியென்று வாணிதாசர் கருதினர். அவளுக்குச் சித்திரக் கலையைக் கற்றுக் கொடுப்பதற்குள் தனக்கு மரணம் நேரிடப் போவதை அறிந்தே வாணிதாசர் தன் சிஷ்யை பானுமதியிடம் இத்தகைய வாக்குறுதி வாங்கிக்கொண்டார். பானுமதிக்கு அப்

பொழுது சித்திரக் கலையைப்பற்றி ஒன்றுமே தெரியாது.

விமலநாதன் இருபது வயதுவரை யுத்தப் பயிற்சியிலேயே ஈடுபட்டு, சிறந்த போர்வீர ஞனன். அதோடு, பானுமதியை மணக்கத் தகுந்த அழகையும் பெற்றிருந்தான். அடிக்கடி பானுமதியின் இனிய கீதங்களைக் கேட்டு மகிழ் வான். பானுமதியும் விமலநாதனுடைய வீரச் செயல்களைக் கேட்டு மகிழ்வாள். சிறு வயதில் இருவருக்கும் ஏற்பட்ட நேசம், பருவம் வந்த வுடன் காதலாகக் கனிந்தது.

இவ்வாறிருக்கையில்தான் பானுமதி தன் குரு வாணிதாசருக்கு வாக்குறுதி கொடுக்க நேரிட்டது. குருவின் வார்த்தையை மீறி அவள் நடக்கமுடியாது. ஆனல் விமலநாதனைத் தவிர வேறு யாரையும் கணவனென்று கருதக்கூட அவளால் முடியாது. ஒருபுறம் காதல்! மற் ருேர் புறம் குருவின் ஆக்ஞை! இரு லட்சியங் களுக்கிடையே பானுமதியின் மனம் கிடந்து குமைந்துகொண்டிருந்தது.

பானுமதி தன் குருவிற்கு வாக்குறுதி கொடுத்ததைப்பற்றித் தன் அத்தான் விமலநாத னிடம் தெரிவித்தாள். இந்தச் செய்தியைக் கேட்டவுடன் விமலநாதன் திகைத்து விட்டான். சித்திரக் கலையைப்பற்றி அவனுக்கு ஒன்றுமே தெரியாது. ஆகவே இப்பொழுது அவனுடைய

காதலுக்குக் குறுக்கே ஒரு தடை ஏற்பட்டது போலிருந்தது. இந்தத் தடையை நீக்குவதற்கு என்ன செய்யலாமென்று பானுமதியும் விமலநாதனும் வெகுநேரம் வரை ஆலோசித்தார்கள். விமலநாதன் சித்திரக் கலையைப் பயின்று வருவதைத் தவிர வேறு வழியே இல்லை. சித்திரம் தீட்டுவதில், தான் வல்லவனாகும் வரையில் பானுமதி தனக்காகக் காத்திருக்க வேண்டுமென்று அவளிடம் உறுதிமொழி பெற்றுக் கொண்டான்.

மறுநாளே விமலநாதன் ஒரு கைதேர்ந்த சித்திரக் கலைஞனிடம் போய்ச் சேர்ந்தான். பானுமதியைச் சீக்கிரமே மணந்துகொள்ள வேண்டுமென்று அவனுக்கிருந்த ஆத்திரத்தினால் ஒரே வருஷத்திற்குள் அவன் சிறந்த சித்திரக் கலைஞனாகி விட்டான். ஊண் உறக்கங்களைக் கவனிக்காமல் எழில் மிகுந்த ஓவியங்களைத் தீட்டிக்கொண்டே யிருப்பான். காதலின் வேகத்தில் வித்தை லகுவாக வந்து விட்டது. தான் எழுதிய படங்களை எதிரே வைத்துக்கொண்டு கற்சிலை போல விழித்த கண் மூடாமல் உற்று நோக்கி அவற்றின் அழகைப் பருகி ஆனந்திப்பான். அந்தச் சமயங்களில் அவன் இந்த உலகத்தில் இருப்பதாகவே உணர்வதில்லை.

சித்திரக் கலையில் ஏற்பட்ட அபாரமோகம் காரணமாக, சில காலத்தில் அவன் பானுமதியையே மறந்து விட்டான். கலை இன்பத்தில்

மூழ்கித் திளைத்துக் கொண்டிருந்தவனுக்குக் காதலின்பம் திரணமாகத் தோன்றியது. பகல் முழுதும் தன் கைவன்மை விளங்கச் சித்திரம் தீட்டுவதும், இரவில் தன் சித்திரங்களைப் பற்றியே சிந்திப்பதுமாகத் தன் காலத்தைக் கழித்து வந்தான். வேறு வெளி உலகச் சிந்தனையே அவனுக்கு இல்லை.

விமலநாதன் இவ்வாறு தன்னை மறந்திருப்பது பானுமதிக்குப் பிடிக்கவில்லை. அவன் மெய் மறந்து படம் எழுதிக் கொண்டிருக்கையில் பானுமதி அவனருகில் போய்ப் பேச விரும்புவாள். ஆனால் விமலநாதன் அவள் வந்ததைப் பார்த்துவிட்டு உடனே தன் வேலையில் ஈடுபட்டு விடுவான். பானுமதி ஏதாவது பேச ஆரம்பித்தால் அவன் "பானு, அதெல்லாமிருக்கட்டும். இந்தச் சித்திரத்தைப் பார்! எவ்வளவு அழகாக இருக்கிறது! என்ன பாவம்! என்ன உணர்ச்சி! ஆஹா! உருவம் நேரில் வந்து பேசுவது போலிருக்கிறதே!" என்று ஆரம்பித்து விடுவான். பானுமதி தங்கள் காதல் விஷயமாக ஏதாவது பேசினால் அவன் காது கொடுத்துக் கேட்பதே இல்லை.

ஒரு நாள் பானுமதி பகல் முழுவதும் அவன் பக்கத்திலேயே காத்திருந்து அவனுடைய சித்திர வேலைகள் முடிந்ததும் தங்களுடைய கலியாண விஷயத்தைப் பற்றிப் பேச்செடுத்தாள். விமலநாதனுக்கு எரிச்சலாக இருந்தது. "பானு,

இப்போவந்து என்னைத் தொந்தரவு பண்ணுதே! இன்னும் ஒரு வருஷம் செல்லட்டும். பின்பு பார்த்துக் கொள்ளலாம்." என்று சொல்லி அவளை அனுப்பி விட்டான். பானுமதி என்ன சொல்லியும் பயனில்லை.

விமலநாதன் கூறியபடி ஒரு வருஷம் கழிந்த பின், பானுமதி அவ்விடம் போய்த் தன்னை மணந்துகொள்ளும்படி வற்புறுத்தினாள். அப்பொழுதும் அவன் "என்ன? அதற்குள்ளாகவா ஒரு வருஷம் கழிந்து விட்டது? அடுத்த வருஷம் இதைப்பற்றி யோசிப்போமே! இப்போது என்னிடம் கலியாணத்தைப் பற்றி ஒன்றுமே பேசாதே!" என்று கடிந்து கொண்டான்.

இவ்வாறு சில வருஷங்கள் கழிந்தன. பானுமதி பொறுமையை இழந்து விட்டாள். கடைசித் தடவையாக விமலநாதனிடம் போய் "நீங்கள் என்னை மணப்பீர்களா மாட்டீர்களா? இரண்டிலொன்று சொல்லுங்கள்" என்று தீர்மானமாகக் கேட்டாள்.

"நான் சித்திரக் கலையில் வல்லவனான பிறகே என் கல்யாணத்தைப் பற்றிச் சிந்திக்க முடியும்!"

"உங்களைவிடச் சிறந்த ஓவியக்காரர் இந்த நாட்டிலேயே இல்லை என்னும்படி நீங்கள் அவ்வளவு வல்லமை பெற்றிருக்கிறீர்கள். உண்மை

இவ்வாறிருக்கையில் நீங்கள் இப்படிப் பேசுவது நியாயமா ?''

"உலகத்திற்கும், உனக்கும் நான் சிறந்த சித்திரக் கலைஞனாகத் தோன்றலாம். ஆனால் என் மனதிற்குமட்டிலும் என்னவோ அப்படித் தோன்றவில்லை. நான் இன்னும் சித்திரக் கலையில் பூரணத் தேர்ச்சி அடையவில்லை என்று தான் உணர்கிறேன்''

"கலை உலகம் எல்லையற்றது. அடிவானத்தைப் போல எட்ட எட்டப் போய்க்கொண்டேயிருக்கும் தன்மையுள்ளது."

"காதலும் அப்படிப்பட்டதுதானே! மணம் செய்து கொள்வதில் எனக்கு இப்பொழுது அவா இல்லை. நீ வேண்டுமானால் வேறு யாரையேனும் மணந்துகொள்ளலாம். எனக்கு இதில் ஆக்ஷேபணை இல்லை. ஆகையால் தயவு செய்து இனிமேலாவது என்னைத் தொந்தரவு செய்யாமலிரு''! என்று சொல்லிவிட்டு, முதல் நாள் தான் வரைந்து வைத்திருந்த மேனகையின் படத்தை எதிரே வைத்துக்கொண்டு அதன் அழகில் லயித்துவிட்டான். விமலநாதன் அந்த மேனகையின் படத்தில் தனது கைத்திறன் முழுவதையும் காட்டியிருந்தான். தேவலோகத்தில் உள்ள ஒரு பெண் இவ்வாறுதானிருக்கவேண்டுமென்று வெகு நாட்கள் கற்பனை செய்து, அவள் நடனமாடுகையில் எவ்விதம் காட்சியளிப்பாள் என்று

மனதில் பூரணமாகப் படம் பிடித்து, பாவம் ததும்பும்படி எழுதப்பட்ட படம் அது! அவன் தன் மனோ உலகில் கண்ட லட்சிய உருவம் திரையில் அப்படியே பிரதிபலித்திருந்தது. படத்திலுள்ள ஒவ்வொரு நெழிவு வளைவுகளிலும் அவன் தன் மனதைப் பறிகொடுத்து லயித்திருந்தான். அப்படிப்பட்ட அபூர்வமான ஒரு படத்தைத் தான் வரைந்து விட்டோமென்று அவன் உள்ளம் பூரித்திருந்தான். அவன் இதழ்களில் தன்னையறியாமல் புன்னகை பூத்தது. ஆனந்த வெறியுடன் படத்தின் எதிரே அமர்ந்திருந்தான்.

விமலநாதன் கூறிய கடுமொழிகளைக் கேட்டுப் பானுமதி பல பல யோசித்துக்கொண்டு அவனருகில் நின்றாள். மேனகையின் படத்தை விமலநாதன் அவ்வளவு ரசிப்பதிலிருந்து அவள் அவன் மீது சந்தேகம் கொள்ள ஆரம்பித்தாள். உணர்ச்சி வேகத்தினால் அறிவு மழுங்கிவிடுகிறதல்லவா? அந்தப் படத்திலுள்ள ஏதோ ஒரு பெண்ணின் மீது அவன் காதல் கொண்டுவிட்டான் என்றும், அதனால்தான் அவன் தன்னைப் புறக்கணிக்கிறானென்றும் அவள் எண்ணினாள். அவ்வாறு எண்ண எண்ண அவளுடைய உள்ளத்தில் பொறாமைத் தீ மூண்டது. தலை சுழல்வதுபோலிருந்தது. உலகமே ஒருவஞ்சக உருவம் போல அவளுக்குத் தோன்றியது. வெறிபிடித்தவள்போலானாள். அரண்மனைக்கு ஓடிப்போய்த் தன் உடைவாளை எடுத்துவந்து மேனகையின்

படத்தை ஆத்திரத்துடன் குத்திக் கிழித்து விட்டாள்.

மறு விநாடியில் விமலநாதனின் உடம்பு படபடத்தது. முன்பின் யோசிக்காமல் தன் கை வாளினால் அதே இடத்தில் பானுமதியைக் குத்திக் கொன்று விட்டான். பானுமதியின் ரத்தம் தோய்ந்த தன் கைவாளுடன் விமலநாதன் படத்தின் அருகில் போனான். "உன்னை நெஞ்சில் அல்லவா குத்திவிட்டாள்! இந்த மாதிரியல்லவா குத்தினாள்" என்று சொல்லியவண்ணம் வாளால் தன் மார்பில் குத்திக்கொண்டு விழுந்து விட்டான்.

# செம்புலிங்கம்

"ஏய் வண்டியை நிறுத்து. உள்ளே இருக்கறது யாரு? இறங்கு சீக்கிரம்."

"அடேயப்பா! செம்புலிங்கமா? ஐயையோ விட்டுடுப்பா! உனக்குப் புண்ணிய முண்டு, அப்பா!"

"என்னது? அப்பாவாவது டப்பாவாவது. அதெல்லாம் ஒண்ணும் பலிக்காது சாமி நம்பகிட்ட. பேசாதே மூட்டை முடிச்சை யெல்லாம் என் முன்னலே வச்சுட்டு மரியாதையாத் தூர நகருங்க. ஏதாச்சும் பேசினீங்கண்ணு விழுந்திடும் மண்டையிலே. நம்பளெவிட நம்ப ஆளுக பொல்லாதவங்க."

"செம்புலிங்கம், திருடன்களிலே நீ மகா யோக்கியன்னு எனக்குத் தெரியும். உன் கிட்ட ஒரே ஒரு வார்த்தை சொல்லிக்கிட்டேறன்."

"வார்த்தை யெல்லாம் அப்புறம் வச்சுக் கிடுங்க. கேட்டுக்கிட்டேறன். முதல்லே காரியம் நடக்கணும். கையிலே, மடியிலே இருக்கறதை எல்லாம் வச்சுட்டுப் பேசுங்க."

"இதோ வச்சுட்டேனப்பா. வேறே ஒண்ணுமே கிடையாது."

"காதிலே என்னமோ மினுங்குதே!"

"அப்பா செம்புலிங்கம், அது சிறு வயசிலே இருந்து காதோடு காதாக் கிடக்கற கடுக்கன். கழட்டினு காது அறுந்துபோகும்."

"சரி. தொலைஞ்சு போகுது. அடேயப்பா மாடசாமி, இந்த மூட்டையைக் கொண்டுபோய் பத்திரமா நம்ப வூட்லே வையி. கருப்பா, நீ வண்டியையும் வண்டிக்காரனையும் சோதனைபோடு". என்று தன் ஆட்களுக்கு உத்திரவிட்டு விட்டு மூத்துசாமி அய்யர் பக்கம் திரும்பி "சாமி' உங்க கதையைச் சொல்லுங்களேன். கேட்போம்" என்றான்.

பொழுது சாய்வதற்கு முன்னமே தன் சொந்த ஊராகிய களக்காட்டிற்குப் போய் விடலாமென்றுதான் முத்துசாமி அய்யர் திருநெல்வேலியிலிருந்து மாட்டு வண்டியில் புறப்பட்டார். வண்டிக்காரன் எவ்வளவுதான் விரட்டிப் பார்த்தும் மாடுகள் தன் சொந்த நடையிலேயே சென்றதனால், களக்காட்டு மலைப் பக்கம் வருவதற்குள் நேரம் இருட்டிவிட்டது. களக்காட்டு மலைப்பக்கம் கொள்ளைக்காரச் செம்புலிங்கம் ஆட்சியென்பது எல்லோரும் அறிந்த விஷயம். வண்டியைத் திருப்பிக் கொண்டு திருநெல்வேலி போவதற்கும் வழி

யில்லை. ஆகவே கடவுளை நம்பிக்கொண்டு வண்டியை வேகமாக அந்தப் பாதையில் விரட்டச் சொன்னார். ஒருவேளை அன்று செம்புலிங்கம் அங்கு இல்லாமலிருக்கலாம். அப்படியே இருந்தாலும் அவனிடம் உண்மையைச் சொல்லி நயந்து கொண்டால் தன்னை விட்டு விடுவான் என்று எண்ணினார். ஆனால் எதிர்பார்த்ததற்கு மாறாகச் செம்புலிங்கம் தன்னை மடக்கிக்கொண்டு பணமூட்டையையும் பறித்துக் கொண்டதனால் அவர் மனமுடைந்துபோய் அவனெதிரே நின்றார்.

"என்ன சாமி? கதையைச் சொல்லுங்க. பேசாதே நிக்கிறீங்களே!" என்றான் செம்புலிங்கம். முத்துசாமி அய்யர் கண்களில் கண்ணீர் ததும்பியது. "அப்பா, எனக்கு ஒரே பொண்ணு. வீட்டை விற்று வாசலை விற்று அதைச் செல்லமாக வளர்த்தேன். படிக்க வச்சேன்; பாட வச்சேன். அவளைச் சரியான பணக்கார வீட்டிலே கல்யாணம் பண்ணிக் குடுத்துடணும்னு எங்கெங்கே யெல்லாமோ மூணு நாலு வருஷமா அலைஞ்சேன். வயது வந்த பொண்ணை எவ்வளவு காலந்தான் வீட்டிலேயே வச்சிருக்கறது! என் கிட்டயும் ரொம்ப ஆஸ்தி ஒண்ணும் இல்லை. அதனாலே சுமாராப் பணம் உள்ள ஒரு மாப்பிள்ளையைப் போன வாரம்தான் தேடிப்புடிச்சுக் கல்யாண விஷயத்தைப் பேசி முடிச்சேன்".

"மாப்பிள்ளை வூட்டாரு எவ்வளவு பணம் கேட்டாங்க?"

"அவங்க நாலாயிரம் ஐயாயிரம்னு கேட்டாங்க. நான் அவங்க காலைக் கையைப் பிடிச்சு ரெண்டாயிரத்துக்கு சம்மதிக்க வச்சேன். வருகிற பதினைலாம் தேதி முகூர்த்தம். அன்னிக்கி நான் சொன்னபடி ரூபா ரெண்டாயிரத்தையும் மாப்பிள்ளையோட தகப்பனார் முன்னாலே எண்ணி வச்சால்தான் மாப்பிள்ளை மண மேடையிலே வந்து உட்காருவார். இதுக்காக வேண்டி திருநெல்வேலியிலே உள்ள எங்க பூர்வீக நஞ்சையை அவசரமா வித்து 1700 ரூபாயைக் கொண்டுக்கிட்டு வந்தேன். நீ அதைப் பிடுங்கிக்கிட்டே! இன்னும் முன்னூறு ரூபாய்க்கி என்ன வழி செய்யறதுன்னு நான் கவலைப்பட்டுக் கிட்டு இருக்கேன். நீ இதையே எடுத்துக்கிட்டா நான் என்ன செய்யறது சொல்லு. செம்புலிங்கம், என் பொண்ணை ஆத்திலே தள்றதைத் தவிர வேறே வழியில்லே." (அவருக்கு அழுகை பொங்கிக்கொண்டு வந்தது)

"சாமி, நீங்க சொன்னதுபூரா ஆகாசவாணி பூமாதேவி சாச்சியா நெசந்தானே?"

"நான் சொன்னது முக்காலும் சத்தியம். இதிலே ஒரு அணுவளவாவது பொய் இருந்தா என்னை இந்த இடத்திலேயே கொன்னுடு. சம்மதம்தான்."

"அப்படின்னு பயப்படாதிங்க, சாமி. இந்த செம்புலிங்கம் அநியாயமாக் கொள்ளையடிக்கற

தில்லேங்கறதைக் கேள்விப்பட்டிருப்பீங்க. அது ஞலே இந்தப் பணம் இப்ப என் கிட்ட இருக்கட்டும். நம்ப பங்காளிக்கி இப்ப கொஞ்சம் அவசரமாப் பணம் வேண்டியிருக்குது. நீங்க பேசாதே வீட்டுக்குப் போங்க. கலியாண ஏற்பாடுகளெல்லாம் நடக்கட்டும். கலியாண தினத்துக்குள்ளே உங்க பணம் உங்க கைக்கி வந்து சேரும். என் வார்த்தையை நம்புங்க. உங்க விலாசத்தை எழுதிக் குடுத்துட்டுப் போங்க. ஒண்ணும் ரோசனை பண்ணும எழுதுங்க விலாசத்தை'' என்று தயாராக வைத்திருந்த ஒரு பென்சிலை அவரிடம் நீட்டினன்.

வேறு வழியில்லை. முத்துசாமி அய்யர் தன் விலாசத்தை அவனிடம் எழுதிக் கொடுத்து விட்டு வண்டியில் ஏறினர். அவனிடம் இன்னும் ஏதாவது பேசினல் அவன் சாந்தமாகப் பேசுவதும் போய்விடுமென்று அவருக்குத் தெரியும். அவன் சொன்னபடியே கேட்டு விட்டால் ஒரு வேளை அவன் மனம் இளகிப் பணத்தைத் திரும்பக் கொடுத்து விடலாம் என்ற நம்பிக்கையோடு ஊருக்குப் போய்ச் சேர்ந்தார்.

வீட்டுக்கு வந்ததும் அவருடைய மனைவி அவர் போய் வந்த விவரத்தை விசாரித்தாள். முத்துசாமி அய்யர் வயலை விற்ற சங்கதியை எல்லாம் சாங்கோ பாங்கமாகச் சொன்னர். செம்புலிங்கத்திடம் பணம் பறிகொடுத்ததை மட்டிலும் அடியோடு மறைத்து விட்டு ''கலியாண தினத்

திற்குள் பணம் வந்து சேரும்" என்று பேச்சை முடித்தார். "வராவிட்டால்?" என்று ஒரு கேள்வியைப் போட்டாள் அவர் சம்சாரம். "வராவிட்டால் நான் எங்கேயாவது ஓடிப்போய் விட வேண்டியதுதான். கடவுள் செயலால் தான் எல்லாம் சரியாக நடக்கவேண்டும். நீ உன் சோலியைப் பார்" என்று அவளை அதட்டி விட்டுக் கலியாண ஏற்பாடுகளைக் கவனித்து வந்தார்.

* * *

கலியாண தினம். முத்துசாமி அய்யர் வீட்டில் ஏக அமர்க்களமாகப் பந்தலெல்லாம் அலங்கரித்திருக்கிறது. அவருடைய சம்பந்தி வீட்டுக்காரர்கள் நாலைந்து வீடுகளில் நிறைந்திருந்தார்கள். மாடி வராந்தாவில் அதற்குள்ளாகவே சீட்டாட்டம் ஆரம்பமாகிவிட்டது. களக்காட்டு மேகரத்தினம் நாகஸ்வரத்தை ஊதிக்கொண்டே பக்கத்திலுள்ள தவில்கார தங்கரத்தினத்தைப் பார்த்து "என்னப்பா மாப்பிளைப் பிள்ளையாண்டான் இன்னும் வரக்காணமே! மணி பத்து ஆவுதே!" என்று ஆச்சரியப்பட்டான். பெண்ணின் தாய் மாமனார் மாப்பிள்ளையின் தகப்பனாரான சம்பந்தி கிருஷ்ணையரைப் பார்த்து "என்ன? எல்லாம் ஆயிட்டுது. மாப்பிள்ளையை அழைக்கப் போகலாமா என்று கால் மணி நேரத்திற்கொருதடவை பல்லவி பாடிக்கொண்டிருக்கிறார். சம்பந்தி கிருஷ்ணய்யரும் "ஆகட்டும். முத்துசாமி அய்யர் வாளைக் கூப்பிடுங்கோ.

போவோம்" என்ற அனுபல்லவியை ஆவர்த்தனம் செய்து கொண்டிருக்கிறார். அதைக் கேட்ட அவர் முத்துசாமி அய்யரைத் தேடிப் போகிறார். முத்துசாமி அய்யர் இதைத் தெரிந்து கொண்டே மாடிப் படிகளில் ஏறி இறங்கிக் கொண்டிருக்கிறார். தன் மைத்துனன் முடிவாகத் தன்னைத் தேடிப்பிடித்து விட்டான் என்று தெரிந்தவுடன் முத்துசாமி அய்யர் "நீ போ. நான் அப்புறம் வருகிறேன்" என்று கோபித்து அனுப்பி விட்டார். மைத்துனருக்கு விஷயம் ஒன்றும் புரியவில்லை. வேறு அலுவல்களைக் கவனிப்பதுபோல சமையல் கட்டிற்குப் போய் விட்டார்.

குறிப்பிட்ட லக்கினம் தவறி விடும்போலிருந்தது. மாப்பிள்ளையின் தகப்பனார் தன் தம்பியைக் கூப்பிட்டு முத்துசாமி அய்யரைக் கையோடு அழைத்து வரும்படி அனுப்பினார். பணத்தை எண்ணிக் கையில் வாங்கினாலொழிய பையனை மணப் பந்தலுக்குள் அழைத்துவரக் கூடாதென்ற தீர்மானத்தோடு உட்கார்ந்திருந்தார் அவர்.

முத்துசாமி அய்யர் தப்புவதற்கு வேறு வழியில்லாமல் தன் சம்பந்தி கிருஷ்ணய்யர் முன் வந்து ஒரு கொலைக் கைதிபோல நின்றார். சம்பந்தி கிருஷ்ணய்யார் அர்த்த புஷ்டியுள்ள ஒரு பார்வை பார்த்தவுடன் "கோவிச்சுக்கிடக் கூடாது. இப்போ முன்னூறு ரூபாதான் கையிலே இருக்கு பாக்கி ஆயிரத்து எழுநூறையும்

பின்னாடி நான் தந்துட்றேன். தயவு பண்ணி நீங்க இதுக்குச் சம்மதிக்கணும். எல்லாம் நாம் நினைக்கிறபடி நடக்கிறதா?" என்றார் முத்து சாமி அய்யர்.

"என்னங்காணும் நினைச்சபடி நடக்கறது போறது. அதெல்லாம் இருக்கட்டும். மாப் பிள்ளை மணமேடைக்கி வரணுமா வேண்டாமா? அதைச் சொல்லும்" என்று சம்பந்தி கிருஷ்ணய் யர் கண்டிப்பாகக் கேட்டவுடன் முத்துசாமி அய்யர் தூணோடு சாய்ந்து உட்கார்ந்து விட்டார். என்ன சொல்வதென்றே புரியவில்லை. ஏதோ ஒரு சொப்பன உலகில் இருப்பதுபோலத் தலை யைத் தொங்கவிட்டுக்கொண்டு ஒன்றும் பேசாம லிருந்தார்.

* * *

செம்புலிங்கத்திற்கு ஏழெட்டு நாளாக உடம்பு சரியில்லை. படுத்த படுக்கையாக இருந் தான். சரியான வேட்டையும் கிடையாது. அவன் மனைவி அருகிலிருந்து அவனைக் கவனித்துக் கொண்டிருந்தாள். திடீரென்று அன்று பதினைலாம் தேதியென்று ஞாபகம் வந்தது. உடனே முத்துசாமி அய்யருக்குக் கொடுத்த வாக்குறுதியை நினைத்தான். தன் கஷ்டத்தைப் பொருட்படுத்தாமல் படுக்கையை விட்டு இறங்கித் தன் பெட்டியைத் திறந்து பார்த்தான். அதில் நூறோ இருநூறோதான் பணமிருந்தது. மனைவியைக் கூப்பிட்டான். அவள் உடம்பில் கிடந்த நகைகளைக்கழட்டினான்.

மறு நிமிஷம் நகைகள் அவன் கூட்டாளி மாட சாமியின் கையில் கொடுக்கப்பட்டது. "மாட சாமி, நீ ஓட்டமாகப்போய் இதைச் செட்டியார் கடையில் அடகுவைத்து ரூபாய் இரண்டாயிரம் வாங்கிக்கொண்டு நேராகக் களக்காட்டிற்குப் போகவேண்டும். இந்த விலாசக்கார அய்யர் அன்று சொன்னபடி எல்லாம் உண்மையாக இருந்தால் ரூபாய் இரண்டாயிரத்தையும் அவரிடம் ஜாக்ரதையாகக் கொடுத்து உடனே திரும்பி வந்து என்னிடம் பதில் சொல்லவேண்டும்" என்று உத்திரவு போட்டு அவனை அனுப்பினான்.

கலியாண வீட்டில் தலையைக் குனிந்து கொண்டிருந்த முத்துசாமி அய்யர் "இந்த அவமானத்தை நம்மால் சகிக்கமுடியாது. இப்படியே வெளியே எங்காவது போய்விட வேண்டியது தான்" என்ற தீர்மானத்தோடு மெதுவாக எழுந்திருந்தார்.

"என்னங்காணும்? எழுந்திருக்கிறீர். எங்களுக்கு என்ன ஜவாப்? இந்தக் களக்காட்டுக் காரர்கள் காரியமே இப்படித்தான். அதெல்லாம் ஒண்ணும் பேசறதுக்கில்லே. நாங்க இப்பவே பழையபடி ஊருக்குத் திரும்ப வேண்டியதுதான். என்ன சொல்கிறீர்?" என்று அதட்டினார் சம்பந்தி கிருஷ்ணய்யர்.

இந்தச் சமயத்தில் தவில்காரனுக்குப் பக்கத்தில் தடியை ஊன்றிக்கொண்டு நின்ற ஒருவன்

முத்துசாமி ஐயரைக் கூப்பிட்டு "சாமி இந்தாங்க நம்ப நடுத்தெரு நாராயணசாமி நாயுடு குடுத் தாரு." என்று அவர் கையில் ஒரு புடவைப் பார்சலையும் ஒரு கடிதத்தையும் கொடுத்தான். முத்துசாமி அய்யர் அவசர அவசரமாகக் கடிதத் தைப் பிரித்துப் பார்த்தார். முகம் மலர்ந்தது. உடனே வெகு அவசரமாகப் புடவைப் பார்சலைப் பிரித்தார். அதில் ஒரு உயர்ந்த பட்டுச்சேலையும் இரண்டு ஆயிர ரூபாய் நோட்டுகளும் இருந்தன. அதைக்கொண்டுவந்த ஆளைப் பார்த்து உபசாரம் பண்ணவேண்டுமென்று அங்குமிங்கும் தேடினார். ஆளைக் காணவேயில்லை.

பணம் கைக்கு வந்ததும் முத்துசாமி அய்ய ருக்குத் தன் ஆனந்தத்தை சம்பந்தியிடம் எப்படித் தெரிவிப்பதென்றே தெரியவில்லை. "இந்தாருமைய்யா பணம். இரண்டாயிரம் போதுமா? ரெண்டாயிரத்து முன்னூறுவேணு மா? என்று ஓங்கிக் கேட்டுவிட்டு இரண்டு ஆயிர ரூபாய் நோட்டுகளை அலட்சியமாக அவர் முன் னால் போட்டார். பணம் கைக்கு வந்தவுடன் கிருஷ்ணய்யரும் ரெம்பத் தமாஷாகப் பேச ஆரம் பித்தார். பழைய சண்டையை இருவருமே மறந்துவிட்டார்கள்.

விவாகம் ஐந்து நாட்கள் சிறப்பாக நடந்தது. முத்துசாமி அய்யரிடம் மீதியாக இருந்த முன் னூறு ரூபாயைக்கொண்டு தன் பெண்ணுக்கு இன்னும் அதிகமான சீர்வரிசைகளைச் செய்தார்.

அந்த ரூபாய் தன் பெண்ணுக்காகச் செம்புலிங்கம் அனுப்பிய கலியாணப் பரிசு என்று எண்ணிக் கொண்டு அவனை மனமார வாழ்த்தினர்.

கலியாணம் முடிந்த மறுவாரம் மாப்பிள்ளை வீட்டார் தங்கள் ஊருக்குப் புறப்பட்டார்கள். ஐந்து வண்டி நிறைய ஆட்களும் சாமான்களும் களக்காட்டு மலைப்பக்கமாகப் போய்க்கொண்டிருந்தது. செம்புலிங்கம் கண்ணில் படாமல் அந்தப்பக்கம் போய்விட முடியுமா?

"ஏய்! வண்டிகளை நிறுத்து! ஆட்கள் அல்லாரும் இறங்குங்க."

"ஐயையோ திருடன்". "அடடா வழிப் பறியா?" "அட தெய்வமே, உனக்குக் கண், காது மூக்கு இல்லையா?" "புதுசாக் கலியாணம் பண்ணிக்கிட்ட மாப்பிள்ளை!" "எங்களை உயிரோட விட்டிடு" "எங்க கிட்டப் பைசாக்கூடக் கிடையாது"; "நாங்க விருந்தாளிகள்" என்று வண்டியிலிருந்து இறங்கிய கிருஷ்ணையர் வகையருக்கள் கூக்குரலிட்டார்கள்.

செம்புலிங்கம் எல்லோரையும் ஒரு முறைப்பு முறைத்து விட்டு "இந்த மாதிரிச் சத்தம்போட்டால் கையிலே இருக்கிற வீச்சரிவாளைப் பாத்துக்கிடுங்க. ஒரே வெட்டு. உடல்வேறே தலைவேறே! ஆமா! அல்லாரும் வாயைப் பொத்துங்க. வரிசையா நில்லுங்க அல்லாரும். மாப்பிள்ளைப் பிள்ளையாண்டான் இங்கே வாங்க. உங்க தகப்பனரைக் கூப்பிடுங்க" என்ருன்.

அவன் கூப்பிடுவதற்குள்ளாகவே கிருஷ்ணய்யர் விழுந்தடித்துக்கொண்டு செம்புலிங்கத்தின் முன்னே வந்து "அப்பா, இதோ இருக்கேன் நான். என்ன செய்யணும்?" என்றார்.

"கலியாணம் எந்த ஊரிலே?"

"களக்காட்டிலே தானப்பா!"

"யார் வீட்டிலே?"

"முத்துசாமி அய்யர் வீட்டிலேதான். அவர் மகளைத்தான் நம்ம பையனுக்கு முடிச்சிருக்குது."

'சரி. அந்த முத்துசாமி அய்யர் கிட்ட எவ்வளவு ரூபா வாங்கினீக?'

"அவா பரம ஏழைகள். ஐநூறுதான் கொடுத்தார்".

"பொய் சொன்ன ஒரே போடுதான். உள்ளதைச் சொல்லும்"

"சொல்லிட்றேனப்பா! ரெண்டாயிரம் வாங்கினேன்"

"அந்த ரூபாயை மரியாதையா இப்படிக் கொண்டு வந்து வையும்"

"ஐயையோ! அதை உன் கையிலே குடுத்துட்டு நான் தெருவிலே போகவா?"

"தெருவிலே போகவா? ஏன் இன்னும் கொள்ளையடிக்கிறதுக்கா? உம்மைப் பாத்தா இதைக் கொண்டு பிழைக்கிறவங்களாத் தெரியலையே. ஏனய்யா ஏழைமாதிரி பாசாங்கு பண்றீர்? மூணு என்றதுக்குள்ளே ரூபாயைக் கீழே வச்சுடணும். என்னுடா, மாடசாமி" கிருஷ்ணய்யர் பதறியடித்துக் கொண்டு மடியில் வைத்திருந்த இரண்டாயிர ரூபாயையும் எடுத்து அவன் முன்னால் வைத்து விட்டார். "ஏய் மாடசாமி, இதை எடுத்துக் கொண்டுபோய் நம்ப கஜனாவிலே வை. ஐயர்வாள், நீங்க கல்யாண வீட்டுக்காரர், அதனாலே உங்க நகைகளையும் பிடுங்கிக்கிட எனக்கு மனசுவரலை. மரியாதையா இப்படியே ஊர் போய்ச்சேருங்க. இந்த ரெண்டாயிர ரூபா அநியாயமா வந்தது. அநியாயமாவே போயிட்டுப் போகுது. கவலைப்படாம எல்லோரும் போயிட்டு வாங்க" என்று எல்லோரையும் வழியனுப்பினான்.

கிருஷ்ணய்யர் உள்பட எல்லோருக்கும் ஒரு திருப்தி. தங்கள் உயிர் பிழைத்ததே என்பதில் அவர்களுக்கு சந்தோஷம். மேலும் அவர்கள் எதிர்பார்த்தபடி கொள்ளைக் கூட்டத்தார்கள் தங்களை அடித்து உதைத்து எல்லாவற்றையும் பிடுங்கிக்கொண்டு விடாமல் அதோடு விட்டார்களே என்று செம்புலிங்கத்தை வாயார வாழ்த்தினார்கள். இந்தவிதமான ஆபத்துக்களையெல்லாம் நினைத்துப் பார்த்தபோது, அவர்கள் இரண்டா

யிரம் ரூபாயை இழந்தது ஒரு பிரமாதமாகத் தோன்ற வில்லை. மகிழ்ச்சியுடனே ஊர்போய்ச் சேர்ந்தார்கள்.

இது நடந்த சில நாட்கள் கழித்து முத்து சாமி அய்யரிடம் ஒருவன் ஒரு காகிதப்பையைக் கொடுத்து விட்டுப்போனான். அதில் இரண்டா யிரம் ரூபாயும் ஒரு கடிதமும் இருந்தது. கலியா ண தினத்தன்று கிருஷ்ணய்யர் பேசிய கடூரமான வார்த்தைகளைக் கேள்விப்பட்டதாகவும், அத ஞல் அவர் அநியாயமாகக் கொண்டுபோன பணம் இரண்டாயிரத்தை மட்டிலும் பிடுங்கி அவருக்கு அனுப்பியிருப்பதாகவும், அந்தப் பணத்தைக் கொண்டு முத்துசாமி அய்யர் தன் பூர்வீக நிலங் களை வாங்கிக்கொள்ளலா மென்றும் செம்புலிங் கம் அந்தக்கடிதத்தில் எழுதியிருந்தான். கடிதம் ஆனந்தக்கண்ணீரால் நனைந்தது.

முத்துசாமி அய்யர் வெளியூருக்குப்போகும் போது வழியில் செம்புலிங்கத்தைக்கண்டு பேசா மல் போவதில்லை. அவன் போலீஸில் பிடிபட்ட அன்று அவர் சாப்பிடவே இல்லை.

# ஜங்கார சுருதி

பாண்டியன் வீரசேனன் தன் ஆஸ்தான மண்டபத்தை விட்டு, வெகு சீக்கிரமாகவே புறப்பட்டு அந்தப்புரத்திற்குச் சென்றான். புதிதாக மணந்து கொண்ட தன்பட்ட மகிஷி கலாவதியுடன் உல்லாசமாகப் பேசிக்கொண்டிருக்க வேண்டுமென்றுதான் அவன் அவ்வளவு விரைவாக அங்கு போனான்.

கலாவதி அப்பொழுது கையில் வீணையுடன் இனிமையாகப்பாடிக் கொண்டிருந்தாள். அவளுடைய உள்ளப்பூரிப்பை அவள் முகத்தில் தோன்றிய புன்முறுவல் தெரிவித்துக் கொண்டிருந்தது. ஏதோ ஒன்றைப் புதிதாகக் கண்டெடுத்தவள் போல அவள் உற்சாகத்தோடு திரும்பத் திரும்ப ஒரே பல்லவியைப் பாடுவதைக் கண்ட வீரசேனன் "பைத்தியம் பைத்தியம்" என்று முணு முணுத்துக் கொண்டான். தான் அங்கு வந்திருப்பதை அவளுக்கு அறிவிப்பதற்காக, மெதுவாகக் காலைத் தரையில் தட்டினான். கலாவதி அவனைத் திரும்பிப் பார்க்கவில்லை. அவளுடைய கண்கள் கை விரல்களிலும், விரல்கள் வீணைத்தந்திகளிலும், மனம் ஆனந்தலகிரியிலும் லயித்திருந்தன.

இன்று ஏன் கலாவதிக்கு இவ்வளவு குதூகலம்? கேதார கௌளை ராகத்தில் வெகு நாளாக முயற்சித்தும் வராதிருந்த ஒரு அபூர்வமான பிடி இப்பொழுது சரளமாக வாசிக்க வந்துவிட்டது. அதையே பத்து முறை வாசித்தாயிற்று. இன்னும் ஆவல் தீரவில்லை. பதினோராவது தடவையும் அதே பிடியை வீணையில் வாசித்துப்பார்த்தாள். இந்தச்சமயத்தில் தான் அரசன் வீரசேனன் தன் வரவை அவளுக்கு உணர்த்தினான். கலாவதி தன் குறிப்பை உணராமல் திரும்பவும் வீணைவாசிக்க ஆரம்பித்ததைக் கண்டு அரசனுக்குச் சிறிது கோபம் வந்தது. தடதடவென்று அவள் எதிரில் போய் நின்றான். அரசி வீணையுடன் எழுந்து நின்றாள். அவளை அமரச்சொல்லிவிட்டுத் தானும் அவளருகில் உட்கார்ந்தான்.

தான் ஆரம்பித்த ராகத்தை முடிப்பதற்காகக் கலாவதி மறுபடியும் வீணையை மீட்டினாள். வீரசேனன் ஏமாற்றமடைந்தவன் போல அவளையே கெஞ்சுதலாகப் பார்த்துக் கொண்டிருந்தான். அவனுடைய மனோநிலையை அவள் கவனிக்கவேயில்லை. மதுவை உண்டு சொக்கி நிற்கும் ஒரு வண்டைப்போல கீத இன்பத்திலேயே அவள் மயங்கிக்கிடந்தாள். வெகு நேரம் ஆயிற்று. வீணையின் ஜங்கார ஸ்ருதி அந்த அறை முழுதும் நிறைந்து ஒலித்துக் கொண்டேயிருந்தது. ஆனால் அரசனுடைய கோபமும் வினாடிக்கு வினாடி விஷம் போல ஏறிக்கொண்டே

யிருந்தது. அவனால் பொறுக்க முடியவில்லை. "கலா, நான் உன்னோடு உல்லாசமாகப் பேசலாமென்று வந்தால், நீ வீணையோடு புலம்பிக் கொண்டிருக்கிறாயே! வா, உத்தியான வனத்திற்குச் செல்லலாம்." என்று கோபமும் கட்டளையும் கலந்த தோரணையில் சொன்னான்.

ராணி திகைத்தாள். ஆனால் தன் திகைப்பை வெளிக்குக் காட்டிக்கொள்ள வில்லை. வீணையை வைத்து விட்டுப் புருஷன் இட்ட கட்டளைப்படி அவன் பின்னால் நடந்தாள்.

உத்தியான வனத்திற்குள் சென்றவுடன், அரசன் அவளை மகிழ்விப்பதற்காகத் தமாஷாக ஏதேதோ பேசினான். சிரித்தான். தான் செய்து முடித்த வீரச்செயல்களை யெல்லாம் நாடகம் போலவே அவளுக்கு நடித்துக் காண்பித்தான். ஆனால் அரசி கலாவல்லியின் காதுகள் அவன் சொன்னவற்றில் ஒன்றையும் கிரகிக்கவேயில்லை. அரசன் கேட்பதற்கு மட்டிலும், "ஆமாம்; இல்லை," என்ற பதில்களை உணர்ச்சியற்ற முறையில் சொல்லிக்கொண்டிருந்தாள்.

* * *

இன்னொரு நாள் மாலை. அரசனும் ஆஸ்தானக் கவி சேகரனும் உத்தியான வனத்திலிருந்து அரண்மனையை நோக்கி வந்துகொண்டிருந்தார்கள். சுகந்தமான தென்றலில் மிதந்துவந்த வீணாகானத்தைக் கேட்டுத் திகைத்து நின்றான்

கவிஞன். அத்தகைய வீணைகானம் அவனுக்கு எங்கேயோ கேட்டதுபோலிருந்தது. பத்து வருஷங்களுக்கு முந்திய அவனது வாழ்க்கை முழுவதும் அவன் நினைவுக்கு வந்துவிட்டது. அரசனுடன் வந்ததை மறந்து நின்றுகொண்டிருந்தான்.

கவி சேகரன், வீணையின் சப்தத்தைக்கேட்டு இவ்வாறு திகைத்து நின்றது, வீரசேனனுக்குப் பிடிக்கவில்லை. ஆனால் தன் வெறுப்பை வெளிக்குக் காட்டிக்கொள்ளாமல் "சேகர், இந்த சங்கீதம் உங்களை இப்படிப் பிரமிக்கச் செய்கிறதே. அவ்வளவு உயர்ந்த கீதமா இது?" என்று கேட்டான். அரசன் சொன்னதைக் காதில் வாங்காமலே "அரசே மன்னிக்க வேண்டும். சற்று நில்லுங்கள். இது என் குருநாதரின் இனிமையான வாசிப்பைப் போலவே இருக்கிறது" என்றான் கவி. அவன் கலாவதியையோ அவளுடைய வீணை வாசிப்பையோ இதுவரை கேட்கவில்லை.

அரசன் போய்க்கொண்டே, "வீணை வாசிக்கிறது வேறு யாருமில்லை. என் தேவி கலாவதி தான். நாம் இருவருமே அங்கு செல்லலாம்" என்றான்.

"அரசே தாங்கள் மிகவும் பாக்யசாலி தான்" என்று சொல்லிக் கொண்டே கவிஞன் அரசனோடு சென்றான். கலாவதியின் எதிரே

இருவரும் அமர்ந்தார்கள். கலாவதி நாலைந்து அபூர்வமான ராகங்களைப் பாடி முடித்தாள். கவிஞனின் முகம் என்றுமில்லாதபடி மலர்ந் திருந்தது. இழந்துபோன செல்வத்தை மீண்டும் பெற்றவன் போல அவன் அரசன் எதிரில் ஆனந்தக் கூத்தாடினன். கலாவதியிடம் நேரடி யாகவே ஏதோ கேட்டுவிட வேண்டுமென்று வாயெடுத்தான். ஆனால் அரசனுடைய முகம் மாறுபட்டிருந்ததைக் கண்டதும், தன் உள்ள மகிழ்ச்சியை அடக்கிக்கொண்டு எழுந்து போய் விட்டான்.

அன்று முதல் கவி சேகரன் அரசனின் ஆஸ்தான மண்டபத்திற்கு வருவது அபூர்வமாகி விட்டது. அரண்மனை அந்தப் புரத்திற்கருகி லுள்ள பலகணியின் வெளிப் பக்கம் நின்று கலா வதியின் வீணகானத்தைப் பருகுவதையே அவன் தனது முக்கிய லக்ஷியமாகக் கொண்டு விட்டான். ராணி கலாவதியும் நாளா வட்டத் தில் இதைத் தெரிந்து கொண்டாள். தன்னு டைய அபூர்வமான வீணை வாசிப்பை அதாவது சங்கீத இன்பத்தை உண்மையாக ரசிக்கக் கூடியவர் ஒருவராவது அந்த அரண்மனையில் இருக்கிறார் என்பதில் அவளுக்கு ஒரு மகிழ்ச்சி! பலகணியின் பக்கம் சேகரன் வந்து விட்டான் என்பதைக் குறிப்பாகத் தெரிந்தவுடன் கலாவதி வீணை வாசிப்பில் தன் திறமை முழுவதையும் காட்டி உள்ள முருகச் செய்வாள்.

சேகரன் ஆஸ்தான மண்டபத்திற்கு வராமல் எங்கெங்கோ சுற்றித் திரிவது, அரசனுக்குப் பிடிக்கவில்லை. இதைப் பற்றி அரசன் அவனிடம் சொல்லியும் பார்த்தான். ஆனால் சேகரின் மனம் திரும்பும் வழியாக இல்லை. வீணை அதிகம் வாசிக்கக் கூடாது என்று அடிக்கடி கலாவதிக்கும் சில கட்டுப்பாடுகளை விதித்து வந்தான். கணவனுடைய கட்டளையை மீறக்கூடாதென்று கலாவதிக்கு அந்தச் சமயங்களில் தோன்றும். ஆனால் சேகரன் பலகணியின் பக்கம் வந்து நிற்கிருன் என்பதை அறிந்து விட்டால், அவனுடைய சங்கீத கானமும், கலை ஆர்வமும் புருஷனுடைய கட்டுப் பாடுகளையெல்லாம் உடைத்தெறியும்படி செய்துவிடும்.

ஒரு சமயம் கலாவதியும் சேகரனும் இது போன்று சங்கீத சாகரத்தில் திளைத்திருக்கையில் அரசன் கோபாவேசத்தோடு கலாவதியின் அறைக்குள் வந்தான். அதே சமயத்தில் சாளரத்திற்குப் பின் புறத்திலிருந்து "ஆஹா!" என்று ஒரு குரல் கேட்டது. அரசன் தடதட வென்று வெளியில் வந்து பார்த்தான். சேகரன் தன்னை மறந்து சாளரத்தின் வெளிப்புறத்தில் சுவரோடு ஒன்றிக் கொண்டிருந்தான்.

சேகரனை இவ்வாறு கண்டதும் அரசனுடைய கோபம் எல்லையை மீறிவிட்டது. கவிஞனைக் கரகர வென்று இழுத்துக் கொண்டு போய் அரண்மனைக்கு வெளியில் தள்ளி விட்டுத்

திரும்பவும் கலாவதியிடம் வந்தான். மிகவும் ஆத்திரத்தோடு "கலா, இந்த வினாடி முதல் நீ வீணையைத் தொடவே கூடாது. தொட்டால் அந்த வீணையை உடைத்து நொறுக்கி விடுவேன். ஜாக்கிரதை!" என்று பயமுறுத்தினான்.

தன்னைக் கொல்வதென்றாலும் கலாவதி அதைப் பற்றிக் கவலைப் படமாட்டாள். தன் வீணையைப் பற்றி அரசன் சொல்லிய வார்த்தைகள் அவளுடைய உள்ளத்தைக் கொட்டியது. அவளுடைய உடல் முழுதும் பதறியது. தன்னுள் குமுறிக் கொண்டிருந்த ஆத்திரத்தை வெளிக்காட்ட முடியாமல் தவித்தாள். எதிர் பாராத ஆபத்தினால் சிறகிழந்து விட்ட தாய்ப் பறவை தன் அருகில் விழுந்து கிடக்கும் சிறு குஞ்சுகளை அணைத்துக் கொள்வது போலக் கலாவதி தன் அருகிலிருந்த வீணையை எடுத்து அணைத்து முத்தமிட்டு உறையினுள் வைத்தாள்.

வெகு நாள் வரையில் கலாவதி வீணையின் அருகில் செல்லவில்லை. கலாவதியின் வீணாகானம் ஒலிக்காத அந்த அரண்மனை, கண் இழந்த மனிதனைப்போல சோபை குறைந்து தோன்றியது. இதுவே வீரசேனன் விரும்பிய காட்சி. கலாவதியின் சங்கீதப் பைத்தியம் இன்னும் சில நாட்களில் அறவே நீங்கி விடும் என்று நினைத்து அவன் மகிழ்ந்தான். ஆனால் கலாவதிக்கோ அந்த அரண்மனை வெறும் சூன்யமாகவே காட்சி யளித்தது. வீரசேனன் தன் கணவன் என்ற

உணர்ச்சி கூட மங்கி வந்தது. அவனுடைய சொற்படி நடக்க வேண்டிய ஒரு வேலைக்காரி என்றே தன்னை நினைத்துக் கொண்டாள். வீரசேனன் செல்லியபடியே ஒவ்வொரு காரியத்தையும் யந்திரம் போலச் செய்து முடித்தாள். அவளுடைய அன்பைப் பெறுவதற்காக வீரசேனன் செய்த முயற்சிகளெல்லாம் வீணாயின. கூண்டில் அடைபட்ட கிளியைப் போல சோகமே உருவாக இருந்தாள் கலாவதி!

பிற நாட்டின் மீது படையெடுப்பதென்றால் வீரசேனனுக்கு அது ஒரு விளையாட்டுப் போலத்தான். ஒருவித காரணமின்றிப் பக்கத்து நாட்டின் மீது படையெடுத்து எளிதாக ஜெயித்து விட்டான். போரில் சூடிய வெற்றி மாலையோடு வந்து கலாவதியைக் காணவேண்டுமென்ற ஆவலினால், வீரசேனன் யுத்தகளத்திலிருந்து குதிரையின் மேல் வெகு வேகமாக வந்து கொண்டிருந்தான். தனது வீரச்செயலைக் காட்டியாவது கலாவதியைத் தன் வசப்படுத்த அவன் இந்தச் சூழ்ச்சியைச் செய்தான். குதூகலத்துடன் அரண்மனைக்குள் சென்றான். கலாவதியின் அறைக்குள் நுழையப் போனவன் உள்ளே இருவர் பேசிக் கொண்டிருப்பதை அறிந்து வெளியில் நின்று விட்டான். உள்ளே, கலாவதியும் சேகரனும் பேசியது வீரசேனனுக்குத் தெளிவாகக் கேட்டது.

"அம்மா, தாங்கள் அனுப்பிய சேவகர்கள் சிறிது நேரம் கழித்து வந்திருந்தால், இந்தச்

சேகரனைத் தாங்கள் கண்ணால் பார்த்திருக்கவே முடியாது'' என்றான் சேகரன்.

''என் பார்த்திருக்க முடியாது?'' இது கலாவதியின் குரல்.

''நான் இங்கிருந்து துரத்தப்பட்ட அன்றே உலகில் எல்லாவற்றையும் துறந்து துறவறத்தை மேற் கொண்டு விட்டேன். ஆயினும் பாழும் மனம் ஏனோ நிம்மதி அடையவில்லை. எனக்குரிய ஒரு இன்பப் பொக்கிஷம் வேறு யாரிடமோ அகப்பட்டுக் கொண்டிருப்பதாக ஒரு உணர்ச்சி என்னைப் பைத்தியமாக்கி வரும் போலிருந்தது. பைத்தியமாகி உளறுவதற்குள் பிராணத்தியாகம் செய்து கொள்வதே நல்லதென்ற முடிவுக்கு வந்தேன். அந்தச் சமயத்தில் தான் தாங்கள் அனுப்பிய சேவகர்கள் வந்து என்னை அழைத்தார்கள். இனி எனக்கு என்ன நேரிட்டாலும் நான் அஞ்சப் போவதில்லை. தங்களுக்கு அரசரால் ஏதேனும் கெடுதல் வரக்கூடாதென்றே நான் கவலைப்படுகிறேன். தாங்கள் இப்பொழுது ஒரு முறை அந்தக் கேதார கௌளை ராகத்தை வீணையில் வாசித்து நான் கேட்க வேண்டும். இதுவே என் கடைசி ஆவல். இதை நிறை வேற்றி வைக்கத் தாங்கள் மனமிரங்க வேண்டும்'' என்று கெஞ்சினான் சேகர்.

ரசிகனின் விருப்பப்படியே என்றுமில்லாதபடி கலாவதி வீணை வாசித்து மகிழ்வித்தாள்.

பின்பு சேகரன் அரண்மனையிலிருந்து துரத்தப் பட்ட முதல் அது வரையில் தான் அடைந் துள்ள மனோ நிலையைச் சுருக்கமாக எடுத்துச் சொன்னான்.

“அம்மா, கல் என்றாலும் கணவன். அவரு டைய வார்த்தையின்படி நடப்பது தான் தங்கள் கடமை!” என்றான் சேகரன்.

“கலையறிவற்ற அவரை நான் இப்பொழுது கணவனாகவே கருதவில்லை. அவர் ஒரு வஞ்சக மிருகம். என்னை மணந்துகொள்ள வேண்டு மென்றே அவர் தனக்கு சகல கலைகளிலும் ரசனையிருப்பதுபோல் ஒரு நாடகம் நடித்திருக்கி றார். நான் இந்தச் சூதையறியாமல், இவரைப் பற்றிக் கேள்விப்பட்டவை யெல்லாம் உண்மை யென்று நம்பி மாலையிட்டு மோசம் போனேன். அபூர்வமாகக் கற்ற கலை வீணாவதை என்னால் சகிக்க முடியவில்லை. மனம் கலை ஒன்றையே நாடி நிற்கிறது. இதற்காக நான் எவ்விதத் தியாகத்தையும் செய்யத் துணிந்து விட்டேன்” என்று கலாவதி துடித்தாள்.

“அம்மா தங்கள் குரு வேதநாதர் தானே?” என்று கேட்டான் சேகர்.

“ஆமாம். தங்களுக்கு எப்படி இது தெரிந் தது? அவர் தான் என் குரு. ராகங்களின் ஜீவனையே அவர் என்னிடம் கொடுத்திருக்கிறார் என்று சொல்ல வேண்டும்.”

"அம்மா, முதல் நாள் நான் தங்கள் வீணை கானத்தைக் கேட்டவுடனேயே தான் இதைத் தெரிந்து கொண்டேன். நானும் வேதநாதரின் சிஷ்யன் தான்!"

"அப்படியா? ஆமாம். என் குருநாதரே ஒரு சமயம் என்னிடம் சொல்லியிருக்கிறார். 'உன்னைப்போல இவ்வளவு சரளமாக வீணை வாசிக்கக் கற்றுக்கொண்டவன் இன்னும் ஒருவன்தான் இருக்கிறான். அவனை நீ காணுதிருப்பதே உன் வாழ்க்கைக்கு நன்மை பயக்கும்' என்று. அதே சிஷ்யரை நான் நேரில் காணும் பாக்கியம் கிடைத்தது என் அதிர்ஷ்டம் தான். தங்களைக் கண்டதன் காரணமாகவே எனக்கு நன்மை ஏற்படப்போகிறது."

"நன்மையா? எம் குருநாதர் கூறியபடி, இருவேறு நிலைமையிலிருக்கும் நாம் இருவரும் சந்திக்க நேர்ந்ததே இருவருக்கும் துன்பத்தைக் கொண்டுவந்து விட்டிருக்கிறது. இதே நிலையில் இங்கு நான் வெகு நேரம் நின்றால் இன்னும் ஆபத்துத்தான் நேரிடும். ஆகையால் சென்று விடுகிறேன். இனி நான் தங்களைச் சந்தித்துத் தங்களது இனிய வீணை கானத்தைக் கேட்கவே முடியாதபடி போய் விடலாம்!"

"இல்லை. குருநாதர் ஆசி கூறியபடி, மறு ஜென்மத்திலாவது நாம் ஒன்று சேருவோம்."

"ஆமாம் அந்த மறு ஜென்மத்தை வெகு விரைவிலேயே அடைவதற்காக நான் பிராணத் தியாகம் செய்துகொள்ளப் போகிறேன்."

"வேண்டாம்! இந்தப் பிறவியிலேயே நாம் இருவரும் மறுஜென்மம் எடுக்கலாமே! தாங்கள் இப்பொழுதே மறு ஜென்மத்தை அடைந்திருக் கிறீர்களே."

"ஓஹோ! நான் துறவறம் அடைந்து விட்டதை சொல்கிறீர்களா?"

"ஆமாம். இந்த விநாடி முதல் நானும் ஒரு துறவி. இந்த சங்கீத விரோதியான வீர சேனனுக்கு இனி நான் அடிமையல்ல."

"அரசி, தாங்கள், பதவி, செல்வம் பொறுப்பு எல்லாவற்றையும் யோசிக்காமல் அவசரப்படாதீர்கள்."

"இவைகள் எல்லாவற்றையும் விட சங் கீதமே எனக்குமேல். தீரயோசித்து விட்டேன். என் கலையின்முன் எதுவுமே நிகரில்லை என்று சொல்கிறேன். நாம் இருவரும் துறவிகளாகிக் காவிரிக் கரையில் ஆனந்தமாக மீதி வாழ்க்கை யையாவது சங்கீதம் தரும் இன்பத்தில் கழிக்க லாம் என்று நினைக்கிறேன். தங்கள் இஷ்டம் எப்படியோ?"

"இதுவே எனக்கு இன்பமளிக்கும். ஆனால் இதன் மூலம் தங்கள் வாழ்க்கை வீணாகி விடுமே யென்று தான் நான் கவலைப்படுகிறேன்."

"இல்லையே. என் வாழ்க்கையை சங்கீத தேவதைக்காகப் பயன்படுத்துவது வீணாகுமா? கலைக்காக என் உலக வாழ்க்கையைத் தியாகம் பண்ணிவிட்டேன். இதை ஒருவராலும் தடுக்க முடியாது."

"தங்கள் இஷ்டப்படியே நானும் நடக்கிறேன். சென்று வருகிறேன்."

"இன்னும் சிறிது நேரத்தில் நான் ஒரு சந்நியாசினியாகத் தங்கள் பர்ணசாலைக்கு வந்து சேர்வேன்" என்றாள் கலாவதி. சேகரன் அவளிடம் விடை பெற்றுக்கொண்டு போய் விட்டான்.

மன்னன் வீரசேனன், வெளி வாசலில் கல்லாகச் சமைந்து நின்றான். உயர்ந்த ஆடையாபரணங்களையெல்லாம் களைந்துவிட்டுக் காவியுடையுடன் வெளியே சென்ற கலாவதியை அரசன் கண்டான். அவளைத்தடுத்து நிறுத்தவோ அவளுடன் பேசவோ அவனால் முடியவில்லை. கலாவதி அரண்மனையை விட்டுப் போனவுடன் அவனுக்கு உலகமே இருண்டு விட்டது போலத் தோன்றியது. நின்ற இடத்திலேயே படுத்து விட்டான்.

மறுநாள் வீரசேனன் அதிகாலையில் எழுந்து வெறிபிடித்தவன் போல ஊருக்கு வெளியே ஓடினான். காவலாளிகள் பின் தொடரவே அவன் வேகம் அதிகரித்தது. அவர்கள் கண்ணில் படாமல்

மனித சஞ்சாரமற்ற அகன்ற காவிரியின் கரையை அடைந்தான் வீரசேனன். மனித சமூகத்தையே இனி ஏறிட்டுப் பார்ப்பதில்லை என்ற உறுதியுடன் ஓரிடத்தில் உட்கார்ந்தான். பக்கத்து மரத்திலிருந்த ஒரு குயில் இனிய கீதமிசைத்தது. குயிலின் கானம் அவன் மனதில் ஒரு புரட்சியைக் கிளறிவிட்டது. "சீச்சீ!" என்று காரி உமிழ்ந்து விட்டு அங்கிருந்து ஓடினான். எதிரிலுள்ள மூங்கில்ப் புதர் ஒன்றிலிருந்து அடிக்கும் காற்று, அவனை எதிர்ப்பது போல வேணுகானத்தை ஏந்தி வந்தது. அந்த ஒலியைத் தன் காதுகளில் நுழைத்த காற்றின் மீது அவனுக்கு ஆத்திரம் உண்டாயிற்று. ஆனால் காற்றை எதிர்க்க முடியுமா? மறுபக்கம் திரும்பி ஓடினான்.

கலகலவென்று பாறைகளின் மீது தவழ்ந்து கொண்டிருந்த காவிரி இன்னிசை அமிர்தத்தைப் பரப்பிக் கொண்டிருந்தாள். காவிரியின் இனிய ஓசை அவனுக்கு அந்தப் பாழும் வீணையின் நாதம் போலவே கேட்டது. அதே சமயம், 'உலகமே கானமயம்' என்று சொல்வது போல ஒரு கிளிக் கூட்டம் 'கீக்கீ' என்று கத்தி ஏளனம் செய்து கொண்டு அவனுடைய தலைக்கு நேராக ஆகாயத்தில் பறந்து சென்றது.

இவ்விதமான இசை உபத்திரவங்களை அவனால் பொறுக்க முடியவில்லை. இதைத் தடுப்பதற்கு வீரசேனன் ஒரு வழி கண்டு பிடித்து

விட்டான். எந்தப் புலனால் ஓசைகளைக் கேட்கிறானோ அந்தப் புலனை அவன் அழித்துக் கொண்டால் அவனுக்கு நிம்மதிதானே! இந்த உபாயத்தினால் அவன் மனம் சாந்தி யடைந்தது. நிம்மதியாகக் காவிரிக் கரையின் ஒரு பாகத்தில் குடிசையமைத்துக்கொண்டு வாழ்ந்து வந்தான். காவிரி நகைத்துச் செல்லும் ஒலி அவன் காதுகளில் வந்து இப்பொழுது உபத்திரவப் படுத்துவதில்லை.

வீரசேனனுடைய குடிசைக்குச் சிறிது தூரத்திலிருந்த இரண்டு குடிசைகளில் கலாவதியும் சேகரனும் துறவிகளாக வாழ்ந்து வந்தார்கள். ஒரு நாள் மாலையில், கலாவதி வீணை வாசித்துக் கொண்டிருந்த சேகரைப் பார்த்து "ஸ்வாமி, கூழாங் கற்களின் மீது உல்லாச நடனம் புரிந்து செல்லும் இந்தக் காவிரி நீரும், அதோ மரங்களில் ஜோடி ஜோடியாக அமர்ந்திருக்கும் பக்ஷி ஜாலங்களும், மலரின் அருகே ரீங்காரம் செய்யும் வண்டுகளும் ஏன் தாங்கள் வாசிக்கும் வீணைகானத்தை எதிரொலிக்கின்றன?" என்று கேட்டாள்.

"அம்மா, இயற்கை யன்னையின் அம்சங்களான இவையாவும் அந்த அன்னையின் ஜங்கார ஸ்ருதியையே பலவிதமாக ஒலித்து நிற்கின்றன. நம்மிடமிருந்து அவை கற்கவில்லை!" என்றான் சேகரன்.

சிறிது நேரம் சென்ற பின் கலாவதி வீணையை ஏந்திக் கலா தேவதையைப் போல

சேகரனின் எதிரே அமர்ந்திருந்தாள். அவள் வீணை வாசித்து முடிந்தவுடன் "அம்மா, இயற்கையிலுள்ள இன்னிசைகளெல்லாம் ஒன்று சேர்ந்து வீணையின் வடிவமாகத் தங்கள் கரங்களில் வீற்றிருக்கிறது. இந்த கானத்தை அனுபவிக்க முடியாத மனிதன் துரதிர்ஷ்டசாலி தான்" என்று ஆனந்தக் கண்ணீர் வடித்தான் சேகரன்.

சேகரனுடைய வார்த்தைகள் ஒன்றும் சற்றுத் தூரத்திலிருந்த வீரசேனனுடைய காதில் விழவில்லை.

# ஆசிரிய ஹிருதயம்

"முத்து, அழாதேடா! பள்ளிக்கூடம் போ. நாளைக்குக் கட்டாயம் காசு தருகிறேன். இன்று ஒரு நாளைக்கு மட்டும் வாத்தியாரிடம் சொல்லிக்கொள்" என்றாள் தாயம்மாள்.

முத்து ஒரு சட்டையை எடுத்துப்போட்டுக் கொண்டு புஸ்தகங்களைக் கையில் தூக்கினான்.

"அம்மா! போய் வருகிறேன்" என்று சொல்லிக் கிளம்பினான்.

"பத்திரமாய் போய்விட்டு வா, கண்ணே!" என்று தாயம்மாள் படுக்கையிலிருந்தபடியே ஈனக் குரலில் சொன்னாள்.

* * *

முத்துவின் தந்தை இறந்து மூன்று வருஷம் ஆயிற்று. தாயம்மாள் பிரியமாக வளர்த்து வரும் எருமை ஒன்றுதான் அவர்களுடைய குடும்பச் சொதது தன் மகனை நன்றாகப் படிக்க வைத்துவிட வேண்டுமென்பது தாயம்மாளின் விருப்பம். அதற்காக அவள் எவ்வளவோ கஷ்டப்பட்டாள். பால் விற்கும் பணத்திலிருந்து

தான் அவர்கள் குடும்பச் செலவும் பையனின் படிப்புச் செலவும் நடக்கவேண்டும்.

தன் குடும்பக் கஷ்டங்களை முத்து நன்ருக உணர்ந்திருந்தான். படிப்பிலும் கெட்டிக்காரன். அவன் மற்றப் பையன்களைப் போலல்லாமல் தாய்க்கு உதவியாக இருந்ததால் தாயம்மா ளுக்குத் தன் மகன் மேல் அளவில்லாத பிரியம்.

முத்து ஆருவது வகுப்பிலிருந்து ஏழாவது வகுப்புக்கு மாற்றப்பட்டான். புதுப் புத்தகங்கள் வாங்குவதற்குக் குறைந்தது பதினைந்து ரூபாயா வது ஆகும். பள்ளிக்கூடச் சம்பளம் வேறு. பலரிடம் கடன் வாங்குவதைத் தவிர வேறு வழி யில்லை. இன்னும் இரண்டொரு புத்தகங்கள் தான் பாக்கி.

இந்தச் சமயத்தில் திடீரென்று மாடு கறவை நின்று விட்டது. தாயம்மாளும் நோய்ப்பட்டாள். கையிலும் தம்பிடி கிடையாது. கடன் கேட்காத இடம் இல்லை. கேட்டபொழுதெல்லாம் கடன் கிடைக்குமா? முத்து என்ன செய்வான்? பள்ளிக்கூடப் பாடங்கள்; தாயின் நிலைமை; வரட்டெருமையைப் பாதுகாக்க வேண்டிய தொந்தரவு; இவற்றிற் கிடையே கடன்காரர் களின் தொல்லை! ஒவ்வொன்ருக நினைத்துக் கொண்டே முத்து பள்ளிக்கூடத்தை நோக்கி வந்து கொண்டிருந்தான்.

டிராயிங் நோட்டுக் கொண்டு வராததற்காக முதல் நாள் உபாத்தியாயர் அவனைத் தண்டித்தார். அன்றும் டிராயிங் பாடம் உண்டு. நோட்டுக் கொண்டு போகாவிட்டால் உபாத்தியாயர் என்ன சொல்வாரோ என்று கவலைப்பட்டான். டிராயிங் நோட்டு வாங்குவதற்காகத்தான் அவன் தன் தாயிடம் காசு கேட்டான். கையில் இருந்தால் அவள் கொடுக்காமலிருப்பாளா?

முத்துவின் நிலைமை உபாத்தியாயருக்கு எப்படித் தெரியும்? அவருக்கு முத்துவின் மேலேயே வெறுப்பு. அதற்குக் காரணம் அவன் ஏழைப் பையனாக இருந்ததுதான்!

வகுப்பிற்குப் போவதா வேண்டாமா என்று பல தடவை யோசித்தபின் முத்து தன் இடத்தில் போய் உட்கார்ந்தான். உபாத்தியாயர் வழக்கம் போல் "நோட்டுக் கொண்டு வராதவன் எழுந்து நில்" என்று கர்ஜித்தார். ஒருவரும் எழுந்திருக்கவில்லை. முத்துவின் கையிலும் நோட்டு இருந்தது. அதே சமயத்தில் சீனிவாசன் என்னும் பையன் "ஸார், என் நோட்டைக் காணவில்லை" என்றான். பின்பு அவன் ஒவ்வொருவர் நோட்டாக வாங்கி அடையாளம் பார்த்துக் கொண்டு வந்தான். முத்துவின் நோட்டைக் கையில் வாங்கினதும் "ஸார், இதோ இருக்கிறது என் நோட்டு! முத்து திருடி வைத்திருக்கிறான்" என்று சத்தமிட்டான்.

முத்து திகைத்து நின்ருன். அவன் உடம்பெல்லாம் வியர்த்தது. என்ன சொல்வது என்று யோசித்துக்கொண்டு இருக்கையில் டிராயிங் உபாத்தியாயர் அவன் காதைப் பிடித்துத் திருகிஞர். கன்னத்திலும் நாலைந்து அடிகள் விழுந்தன. "திருட்டு நாயே! ஏண்டா நோட்டைத் திருடிஞய்? சொல்" என்று அதட்டிஞர்.

தன்னைத் 'திருட்டு நாய்' என்று சொன்னது, முத்துவுக்குப் பொறுக்க முடியவில்லை. அவன் தேம்பித் தேம்பி அழுது கொண்டே, "சார், நோட்டு வாங்கப் பணமில்லை. நோட்டுக்கொண்டு வராவிட்டால் நீங்கள் அடிக்கிறீர்கள். நான் என்ன செய்வது?" என்று கெஞ்சிஞன்.

"கையிலே காசில்லாத போஞல் ஏண்டா படிக்க வருகிருய்? பேசாமல் மாடு மேய்க்கப் போகிறதுதானே! திருடியும் விட்டுச் சமாதானமுமா சொல்கிருய்?" என்று இன்னும் நாலைந்து அடிகள் கொடுத்தார்.

முத்து தன் தரித்திரத்தைப் பற்றிச் சொன்னதைக் கேட்டதும் சீனிவாசன் கண்களில் கண்ணீர் ததும்பிற்று. அவன் உபாத்தியாயருக்குத் தெரியாமல் வகுப்பை விட்டு வெளியே போய் விட்டான்.

உபாத்தியாயர் ஒரு கடிதத்தை எடுத்து ஹெட்மாஸ்டருக்கு முத்துவைப் பற்றி ரிப்

போர்ட் எழுதினார். ஒரு சேவகனைக் கூப்பிட்டு அவனிடம் அதைக் கொடுத்து "இவனைக் கொண்டு போய் ஹெட்மாஸ்டரிடம் விட்டு இந்தக் கடிதத்தையும் கொடு" என்று சொல்லிக் கொண்டிருந்தார். அப்பொழுது வெளியே சென்றிருந்த சீனிவாசன் வந்து விட்டான். அவன் கையில் ஒரு புது நோட்டு இருந்தது.

அவன் சேவகனை நிறுத்திவிட்டு உபாத்தியாயரிடம் போய், "சார், நான் தான் என் நோட்டை அவனிடம் கொடுத்து வைத்திருந்தேன். ஞாபக மறதியினால் அவன் எடுத்ததாக உளறி விட்டேன். அவனை மன்னித்து விடுங்கள்" என்று கேட்டுக் கொண்டான். பின்பு அவன் முத்துவினிடம் போய், "கோபித்துக் கொள்ளாதே முத்து. அப்போதே இப்படித் தெரிந்திருந்தால் நான் வாத்தியாரிடம் சொல்லியிருக்க மாட்டேனே! இந்த நோட்டை எடுத்துக் கொள்" என்று ரகசியமாய்ச் சொல்லி நோட்டையும் அவன் கையில் கொடுத்தான்.

* * *

மேலே சொன்ன சம்பவங்கள் நடந்து இருபது வருஷங்களாயின. முத்து உள்ளூரில் ஒரு சின்னக் கடை வைத்திருந்தான். சீனிவாசன் உள்ளூர்ப் பள்ளிக்கூடத்தில் நாலாவது வகுப்பு உபாத்தியாயராக வேலை பார்த்து வந்தான். முத்துவின் மகன் சோமுவுக்கு சீனிவாசன் தான் உபாத்தியாயர்.

சரஸ்வதி பூஜைக்கு இன்னும் ஒரு வாரம் இருக்கிறது. ஒவ்வொரு பையனும் இரண்டணா கொண்டுவர வேண்டுமென்பது தலைமை உபாத்தியாயர் சீனிவாசனின் கட்டளை. அநேகமாக எல்லாப் பையன்களும் இரண்டு நாளில் கொடுத்து விட்டார்கள். சோமு மட்டும் "நாளை, நாளை" என்று காலம் கடத்தி வந்தான். "நாளைக்குக் கொண்டு வராவிட்டால் உதை" என்று சீனிவாசன் கண்டிப்பான உத்தரவு பிறப்பித்தான்.

முத்துவின் கடையில் தினம் இரண்டணாவிற்கு விற்பதே கஷ்டம். அவன் எப்படி ஒரு நாளைய விற்ற முதலை சரஸ்வதி பூஜைக்காகக் கொடுக்க முடியும்? ஆகவே சோமு மறு நாளும் வெறும் கையோடு பள்ளிக்கூடம் போனான். "காசு எங்கே?" என்றான் சீனிவாசன். "எங்க அப்பா, 'துட்டுக்கு வழியில்லை, போ' என்று துரத்தி விட்டார்" என்றான் சோமு.

சீனிவாசனுக்குக் கோபம் வந்து விட்டது. "போடா பள்ளிக்கூடத்தை விட்டு! தரித்திரம்! இரண்டணாவுக்கு வழி யில்லையாம். பின்னே ஏண்டா படிக்க வருகிறாய்?" என்று சோமுவைக் கோபித்து வீட்டுக்குப் போகச் சொன்னான்!

# கதம்பம்

மகாகவி மாதவன் ஒரு பூஞ்சோலையினுள் நுழைந்தான். மலர்களின் நறுமணம் அவன் மனத்தைக் கவர்ந்தது. நவநவமான ரமணீயக் காட்சியில் அவன் லயித்துவிட்டான். மலர்களின் வர்ணபேதங்கள் சங்கீத ஸ்வரங்களைப்போல ஒன்ருெடொன்று இணைந்து இயற்கையன்னை இயற்றிய ஒரு பெரும் காவியம்போல விரிந்து கிடந்தது. அந்த மலர்க்காட்டில் நிசப்தம் எங்கும் ஆட்சி புரிந்தது.

கவிஞன் அருகிருந்த பளிங்கு மேடையின் மீது அமர்ந்தான். கற்பனை லோகத்தில் மூழ்கி விட்டான்.

மலர் உலகத்தில் அன்று என்னவோ திரு நாள் போலிருக்கிறது. மல்லிகைக் கொடியி லிருந்து சில பூக்கள் குதித்து வந்தன. எதிர்ப் பக்கத்திலிருந்து சில சம்பங்கிகளும் உல்லாசமாக நடந்து வந்தன. இரு மலர்க்குமரிகளையும் வர வேற்று இடமளித்தது தடாகத்திலிருந்த ஒரு தாமரை இலை. மல்லிகையும் சம்பங்கியும், அரும்பிய புன்னகையோடு, தாமரை இலையின் மீது அமர்ந்தன. சிறிது நேரத்தில் ரோஜா,

செவந்தி, மந்தாரை, கனகாம்பரம், நீலாம்பரம் முதலான மலரினங்களும் தேவ கன்னிகைகள் போல வந்து அவற்றுடன் அமர்ந்தன.

அந்தப் பூங்காவனத்திலுள்ள அத்தனை மலர் இனங்களும் அங்கு வந்து சேர்ந்தவுடன் ஒவ் வொன்றும் தத்தம் தனி அழகைப்பற்றி விஸ் தரிக்க ஆரம்பித்து விட்டன. ஆனால் மனித உள்ளங்களைப் பாழ்படுத்தும் வீண் பெருமையோ அசூயையோ அவைகளிடம் தோன்றவில்லை. ஒரே இன்பமயமான சம்பாஷணைகள்.

"என் இதழ்கள், கன்னியர் அதரங்கள் போல் எவ்வளவு மென்மையாக இருக்கின்றன பார்" என்று தன் அருகிலிருந்த சம்பங்கியைப் பார்த்துக் கூறியது ரோஜா. சம்பங்கி அதன் மெல்லிய இதழ்களில் முத்தமிட்டுவிட்டுத் தன் தூய வெண்மை நிறத்தைப் பாலின் நிறத்திற்கு ஒப்பிட்டது. ஆயிரம் இதழ்களோடு கலகல வென்று நகைத்துக்கொண்டிருந்த செவந்தி "இதோ பார், என் இதழ்கள், தங்க நிறத்தோடு செழித்திருப்பதை. என் லாவண்யத்தை நன்றாகப் பார்த்தாயா?" என்று குலாவியது.

"தங்கத்தின் நிறத்தை நானல்லவா பெற் றிருக்கிறேன்? அதனால்தானே எனக்குக் கன காம்பரம் என்றுகூடப் பெயரிட்டிருக்கிறார்கள்?" என்று ஒரு குதி குதித்தது கனகாம்பரம்.

“ தங்க நிறம் உனக்குத்தான் ஏகபோக உரிமை என்று நினைத்துக்கொள்ளாதே! எனக்கும் அதில் தாராளமான பங்கு உண்டு” என்று பெருமிதத்துடன் தலைநிமிர்ந்து சொன்னது தாழம்பூ, ஒய்யாரமாக.

“ தங்கம் இந்த லோகததுப் பொருள்தானே அக்கா! நான் ஆகாயத்திலிருந்தே நீல வர்ணத்தை எடுத்துக்கொண்டிருக்கிறேனே” என்று நீலாம்பரம் சிறு குழந்தையைப்போல மழலை மொழிந்தது.

ஒவ்வொரு வகை மலரும் தத்தம் நிறத்தையே பார்த்து உள்ளம் பூரித்துக் கொண்டது. நிற பேதங்களின் அழகு நன்ருகத் துலங்கும்படியாக அவைகள் வரிசை வரிசையாக அமர்ந்தன. அப்பொழுது ரோஜா கூறிஞள்: “ என் பக்கத்தில் பச்சை நிறமுள்ள மலர் ஏதாவது இருந்தால், நான் இன்னும் நன்ருய்ச் சோபிப்பேன் ” என்று ரோஜா கூறியதை அருகிலிருந்த ஒரு மருக்கொழுந்துச் செடி கேட்டது. பச்சை வர்ண மலர் இல்லாத குறையைத் தீர்க்க எண்ணி, ஒரு கொத்து மருக்கொழுந்தை உடனே ரோஜாவின் பக்கம் அனுப்பியது. ரோஜாவிற்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை. ஒரு துளி தேனை ஆனந்தக் கண்ணீராக வடித்து மகிழ்ந்தது.

பச்சை, ரோஜா, வெள்ளை, சிகப்பு, நீலம், மஞ்சள் ஆகிய பல வர்ணமுள்ள மலரினங்கள்

அதனதன் ஸ்தானங்களில் நிறபேதங்கள் சோபிக்கும்படி அமர்ந்தன.

இவை யாவற்றையும் கவனித்துக்கொண்டிருந்த கவிஞனுடைய இதயம் பரவசமடைந்தது. கற்பனை லோகத்திலிருந்து எழுந்தான். 'மலர்ச் சேர்க்கை,' 'கதம்பம்' என்று எக்களித்துக்கொண்டே அந்த மலர்களை அப்படியே நார் கொண்டு இணைத்து விட்டான். அதே சமயம் அவனுடைய காதலி புஷ்பவல்லி அவனைத் தேடிக்கொண்டு அங்கு வந்து சேர்ந்தாள். கவிஞன் தான் கட்டிய பூங்கொத்தை அவளுடைய கூந்தலில் சூட்டினான். கரிய மேகம் போன்ற அவளுடைய சடைப் பின்னலில் அமர்ந்த அந்தக் கதம்ப மலர்களுக்கு இன்னும்ஒரு புது வர்ணம்—கறுப்பு சேர்ந்து விட்டது. தங்கள் அழகையும், நிறங்களையும், மணத்தையும் இன்னும் விளம்பரப் படுத்த—தலைமேல் வைத்துக் கொண்டாட—ஒரு அழகிய மங்கை அகப்பட்டாளென்று மலர்கள் குதூகலித்துச் சிலிர்த்தன. கவிஞன் கூத்தாட ஆரம்பித்து விட்டான். பார்த்துப் பார்த்து மகிழ்ந்தான். 'கதம்பம்; கதம்பம்' என்று கூறிக் களித்தான்.

சில நாட்கள் கழிந்தன. கவிஞன் பூஞ்சோலையை நோக்கிப் போய்க்கொண்டிருந்தான். வழியில் ஒருவன் கூடையில் ஏதோ கொண்டு போனான். கூடையிலிருந்து மலர்களின் வாசனை வரவே "கூடையில் என்ன?" என்று கேட்டான் கவிஞன்.

புஷ்ப வியாபாரி கூடையைக் கீழே இறக்கி, "கதம்பம், மொளம் அரையணு" என்ருன். "அரையணு" என்ற வார்த்தை கவிஞன் உள்ளத்தில், கூரிய அம்புபோல் தைத்தது. அவனுல் ஒன்றும் பேசவே முடியவில்லை. "ஏனுங்க முழிச்சாப்போல நிக்கிறீங்க?" என்று கூறி விட்டுப் புஷ்ப வியாபாரி போய் விட்டான்.

"அடடா! மனிதன் அழகிற்கல்லவா விலை கூறிவிட்டான். இயற்கை, எத்தனை கோடி காலம் முயற்சித்துப் பெற்றது இந்த அழகை! மனிதன் அதை அற்பக் காசுக்கு மதித்து விட்டானே! மனித இனத்திற்கே உரியதான அழகுணர்ச்சிக்குங்கூட வரி விதிக்கிருனே! என்ன மனிதர்கள்! இனி, சூரிய ஒளியைக்கூடப் பணமாக்கிவிடுவான் இந்த மனிதன்! ஹூம், அது அவன் குற்றமல்ல! அவனை ஆட்டி வைக்கும் விதியின் வேலை" என்று முனகிக் கொண்டே பழையபடி பகற் கனவு காணச் சென்ருன் கவிஞன்!

# ஆனந்தக்கண்ணீர்

குருவிக் குடியில் முனியப்பனுடைய ஒத்தை மாட்டு வண்டியைத் தெரியாதவர்களே கிடையாது. குருவிக் குடிக்கும், குறும்பூர் ரயில்வே ஸ்டேஷனுக்கும் அவனுடைய வண்டி பறந்து கொண்டிருக்கும். அதிகாலையில் அவனுடைய வண்டி 'ஜல்ஜல்' என்ற சதங்கை ஒலியோடு தெருவில் போகும். அதிலிருந்தே அந்தத் தெரு ஜனங்கள் மணி சரியாக ஐந்தரை என்பதைத் தெரிந்துகொள்வார்கள். நகரங்களிலுள்ள வண்டிக்காரர்களைப்போல, அதிக வாடகைக்காக முனியப்பன் பிரயாணிகளிடம் வாதாடுவது கிடையாது. கொடுத்ததைச் சந்தோஷமாக வாங்கிக்கொள்வான். கிராம ஜனங்களுக்கு அவன் மீது அலாதியான பிரியம் உண்டு.

பக்கத்து ஊரில் மாரியம்மன் கோவிலில் திருவிழா நடக்கும்போது முனியப்பனுடைய உற்சாகத்தைச் சொல்லி முடியாது. நான்கு நாட்களில் ஐம்பது அறுபது ரூபாய் சம்பாதித்து விடுவான்.

மேலே சொன்னதெல்லாம் முனியப்பனுடைய வாலிப வயதில் நடந்தவை. இப்

பொழுது அவன் வாழ்க்கைச் சக்கரத்தில் அடிபட்டு நைந்து உற்சாகமின்றி எலும்புக்கூடாக வண்டியினுள் உட்கார்ந்திருந்தான். அவனுடைய வண்டியும் மாடும் அவனுடைய தற்கால வாழ்க்கையைப் போலவே சோபை இழந்து தள்ளாடித் தள்ளாடிச் சென்றுகொண்டிருந்தது. அதே ஊரில் இன்னும் நாலைந்துபேர் வண்டி வைத்துப் பிழைக்க ஆரம்பித்து விட்டதால், முனியப்பனின் வண்டியைத் தீண்டுவாரே இல்லை. அநேக நாட்களில், அவன் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து வெறும் வண்டியையே வீட்டுக்கு ஓட்டிக்கொண்டு வருவான்.

இத்தனை கஷ்டங்களோடு தன் ஒரே மகள் முத்தம்மாளைக் கலியாணம் செய்துகொடுக்க வேண்டிய கவலையும் முனியப்பனை வாட்டியது. எத்தனையோ இடங்களைப் பார்த்தான். முனியப்பனுடைய தற்காலப் பொருளாதார நிலைமையை அறிந்தவர்கள் அவனுடைய பெண்ணைக் கலியாணம் செய்துகொள்ள விரும்பவில்லை. முத்தம்மாளின் நற்குணங்களையும், அழகையும், அறிவையும் நன்ருகத் தெரிந்த இரண்டொரு மாப்பிள்ளை வீட்டார்கள்மட்டிலும் முனியப்பனிடம் "பெண்ணுக்கு என்ன நகை போடுவதாக உத்தேசம்?" என்று கேட்டார்கள்.

முனியப்பன் இந்தமாதிரி விஷயங்களில் ரொம்ப கருராக இருப்பான். "முத்தம்மாள்

கழுத்தில் ஒரே ஒரு அட்டிகை கிடக்கிறது. அவ்வளவுதான் நகை. இதற்குமேல் நகை போடுவதற்கு இப்பொழுது என் கையில் பண மில்லை" என்று உண்மையைச் சொன்னான். இதைக் கேட்டதும் அந்த இரண்டொருவர் களுக்கும் அதிருப்தி ஏற்பட்டது. ஆகவே முத் தம்மாள் தன் வீட்டிலேயே இருந்து வந்தாள்.

தங்கப்பன் முனியப்பனுக்குத் தூர பந்து; மருதாலூர் ரயில்வே ஸ்டேஷனில் 'போர்ட்ட' ராக வேலை பார்த்து வந்தான். தங்கப்பன் தன் பெயருக்கேற்றபடி குணத்திலும் தங்கமாகவே இருந்தான். "நகை எவ்வளவு போடுவீர்கள்?" என்று கேட்ட மாப்பிள்ளை வீட்டார்களில் தங்கப்பனுடைய தகப்பனும் ஒருவன்.

முனியப்பன் தற்செயலாக மருதாலூர் ரயில்வே ஸ்டேஷனில் தங்கப்பனைச் சந்தித்தான். தன் கஷ்டங்களையெல்லாம் அவனிடம் எடுத்துச் சொன்னான். அதைக் கேட்டு தங்கப்பனின் மனம் இளகி விட்டது. தன் வீட்டுக்குப்போன வுடன், நான் முத்தம்மாளையே கலியாணம் செய்து கொள்வேன்" என்று தகப்பனிடம் சொன்னதன் காரணமாக, வீட்டைவிட்டே வெளியேறவேண்டி வந்தது. அதற்காகத் தங் கப்பன் கவலைப்படவில்லை. நேராக முனியப்பன் வீட்டிற்கு வந்து, தன் வீட்டில் நடந்த விஷயங் களை அவனிடம் சொன்னான்.

அன்றைய தினமே தங்கப்பனுக்கும் முத்தம்மாளுக்கும் கலியாணம் நிச்சயமாயிற்று. தற்செயலாகப் பெண்ணின் கழுத்தைப் பார்த்த தங்கப்பன் முனியப்பனிடம் "நீங்கள் சொன்ன அட்டிகைக்குப் பதக்கம்கூட இல்லைபோலிருக்கிறதே!" என்றான். முனியப்பனுக்குத் துக்கம் நெஞ்சை அடைத்தது. சிறிது நேரம் பேசாமலிருந்தான். சில நாட்களுக்கு முன்புதான் அவன் தன் வண்டியை 'ரிப்பேர்' செய்வதற்காக அட்டிகைப் பதக்கத்தை விற்றுப் பணம் கொடுத்தான். அதனால் அட்டிகையில் பதக்கமில்லாமலிருந்தது. "தங்கப்பா, உங்களை ஆடிக்கு அழைக்கும்போது நிச்சயமாகப் பதக்கம் வாங்கிப் போட்டுவிடுகிறேன். கவலைப்படாதே" என்றான் முனியப்பன்.

கலியாணம் முடிந்து வந்து தங்கப்பனும் முத்தம்மாளும் மருதாலூரில் சந்தோஷமாகத் தனிக் குடித்தனம் நடத்தி வந்தார்கள். முத்தம்மாள் தனக்குக் கிடைத்த ஒரு அரிய ரத்தினமென்றே தங்கப்பன் நினைத்து வந்தான். முத்தம்மாளும் தங்கப்பனைப்பற்றி அப்படியே எண்ணியிருந்தாள். இதனால் எல்லாக் குடும்பத்திலும் நடக்கும் புருஷன் பெண்சாதி யுத்தம் அங்கு நடக்கவில்லை. அவர்களுடைய குடும்பத்தேர் சச்சரவு என்ற முட்டுக்கட்டை யில்லாமல் காலமென்ற ரஸ்தாவில் போய்க்கொண்டிருந்தது.

பெண்ணைப்பற்றிய கவலை முனியப்பனை விட்டு நீங்கியது. ஆனால் பணக்கவலை முன்னை

விட அதிகரித்தது. வருவாய் சுருங்கிவிட்டது. கடனும் வாங்கினுன். கடன்களை அடைக்க வண்டி மாட்டையும் விற்று விட்டான். வண்டி மட்டிலும் அவன் வீட்டினருகில் தூங்கிக் கொண்டிருந்தது.

முனியப்பனுடைய நிலைமை இவ்வாறு மோசமாகி வந்ததைத் தங்கப்பன் கேள்விப் பட்டு மிகவும் வருந்தினுன்.

ஆடி பிறந்தது. தான் தங்கப்பனுக்கு வாக் களித்தபடி அட்டிகைக்குப் பதக்கம் எப்படி வாங்கிக் கொடுப்பதென்று முனியப்பன் கவலை யில் மூழ்கிவிட்டான். தினமும் அவனுக்கு இந்த யோசனை தான்.

ஆடி அறுதிக்கு நான்கு நாட்களிருக்கும் போதே தங்கப்பனும் முத்தம்மாளும் குருவிக் குடிக்குப் புறப்படுவதைப் பற்றிப் பேசிக்கொண் டார்கள். தன் மாமனுடைய வண்டிக்கு ஒரு மாடு வாங்கிக்கொடுத்து, பிழைப்பிற்கு ஒரு வழி செய்துவிட வேண்டுமென்பது தங்கப்பனுடைய விருப்பம். ஆனுல் விருப்பத்தை நிறைவேற்ற அவன் கையில் பணமில்லை. மாடு வாங்குவதற்கு முத்தம்மாளின் அட்டிகையை விற்பதைத் தவிர வேறு வழியில்லை.

மகளும் மருமகனும் ஆடி அறுதிக்கு ஒரு நாள் முன்கூட்டியே வந்து விட்டதைப்பற்றி முனியப்பனுக்கு மிகவும் ஆனந்தம். அவர்கள்

தங்களோடு காளைமாட்டையும் கொண்டுவந்திருந்ததைக்கண்ட முனியப்பன் " தங்கப்பா, ஏது மாடு கொண்டு வந்திருக்கே? சந்தையிலே விக்கிறதுக்கா?" என்று கேட்டான்.

" இல்லே மாமா. உங்கள் வண்டிக்காக வாங்கி வந்திருக்கேன்" என்றான் தங்கப்பன்.

" வண்டியா? என் வண்டியைத் தான் வித்துட்டேனே. அதை வித்துத்தானப்பா முத்தம்மாளோட அட்டிகைக்குப் பதக்கம் வாங்கிவச்சிருக்கேன். இதோ பாரு!" என்று தான் வாங்கின அழகான பதக்கத்தைக்கொண்டு வந்து தங்கப்பன் கையில் கொடுத்தான்.

" அட மாமா! இப்பதக்கத்தை வச்சு என்ன செய்யறது? அந்த அட்டிகையை வித்து தானே நானு உங்களுக்குன்னு மாடு வாங்கி வந்தேன், என்று விழுந்து விழுந்து சிரித்தான் தங்கப்பன். முனியப்பன் ஆனந்தக் கண்ணீர் வடித்தான்.

(ஓ. ஹென்றி எழுதிய ஆங்கிலக் கதையின் தழுவல்.)

## மலராத பூக்கள்

பாண்டியன் கமலநாகன் அந்தப்புரத்தி லுள்ள ஓர் பளிங்கு மேடைமீது அமர்ந்திருந் தான். அப்போது அவன் மகள் அங்கயற்கண்ணி பூங்காவனத்திலிருந்து வந்து கொண்டிருந்தாள். தன் தகப்பன் ஏதோ ஆழ்ந்த யோசனையில் ஆழ்ந்திருப்பதைக்கண்டதும், "ஏனப்பா என்ன யோசனையில் ஆழ்ந்துவிட்டீர்கள்?" என்றாள்.

"எல்லாம் உன் கவலைதான். எத்தனையோ தடவை கேட்டேன் நீ பதில் சொல்லவில்லை. இப்போதாவது சொல். நீ யாரை விரும்பு கிறாய்?" என்று கேட்டுக்கொண்டே அவள் அழகிய கூந்தலைக் கோதிவிட்டான்.

அங்கயற்கண்ணி தலையைக் குனிந்து கொண் டே, "அப்பா நாளைக்குக் கட்டாயம் சொல் கிறேன்" என்று சொல்லிவிட்டுப் போய் விட் டாள்.

* * *

முதல் மந்திரி மகன் அம்பலவாணனும், இரண்டாவது மந்திரி மகன் மதிவதனனும் அரண்மனை உத்தியான வனத்தினுள் நுழைந் தார்கள். அங்கயற்கண்ணியும் பின் தொடர்ந்

தாள். இருவரும் சட்டென்று திரும்பி நின்றார்கள். தங்கள் சிநேகிதியின் முகத்தில் ஏற்பட்டிருந்த மாறுதலைக் கவனித்த அவர்கள், எப்போதும் போலக் குதூகலமாக அவளைக் கூப்பிட்டுப் பேசவில்லை.

"அங்கயற்கண்ணி, ஏன் இப்படி இருக்கிறாய்? அப்பா எதாவது கோபித்தாரா?" என்று கவலையோடு கேட்டான் மதிவதனன்.

"இல்லை. 'உன் இரண்டு கண்களில் நீ எதை விரும்புகிறாய்? என்ற கேள்வியைக் கேட்டிருக்கிறார் அப்பா! அதற்குப் பதில் சொல்ல முடியாமல் நான் திகைத்துக்கொண்டிருக்கிறேன்" என்றாள் அங்கயற்கண்ணி.

"நீ சொல்வது எங்களுக்குப் புரியவில்லையே!" என்றான் அம்பலவாணன்.

"எல்லாம் என் கலியாண விஷயத்தைப் பற்றியதுதான்!" என்றாள்.

அம்பலவாணன் சிரித்துக்கொண்டே "இதற்குக் கண்களையா உபமானம் சொல்வது? ஒரு பெண் ஒருவர்மீது தானே காதல்கொள்ள முடியும்!" என்றான்.

"ஆனால் என் விஷயத்தில் மட்டும் அப்படி இல்லை. விதி என்னோடு விளையாடுகிறது. இரண்டு உருவங்கள் என் இதயத்தில் பதிந்துவிட்டன.

அந்த இரண்டும் ஏற்றத் தாழ்ச்சியற்றவை. அவைகளில் ஒன்றை நிறுத்திக் கொண்டு ஒன்றை நீக்கிவிடுவதென்பது முடியாத காரியம். என் இதயத்தில் அந்த உருவங்கள் இடம் பெற்றது, இன்று நேற்று அல்ல. பொருனைநதிக் கரையில் நாம் மூவரும் மணல் வீடு கட்டி, பெண் மாப்பிள்ளை விளையாட்டு விளையாடிய காலத்தி லிருந்தே என் மனக்கோவிலில் அவை பதிந்து விட்டன. எப்பொழுதுமே நாம் அம்மாதிரிக் குழந்தைகளாக இருந்துவிடக்கூடாதா என்று தோன்றுகிறது" என்ருள்.

அவள் இந்தமாதிரிப் பேசிக்கொண்டே போவதை அம்பலவாணனுல் தாங்கமுடியவில்லை. "அங்கயற்கண்ணி, இன்னும் நீ குழந்தை மாதிரியே பேசுகிருய். இது சரியல்ல. வயதிற் கேற்றபடியும் உலக நடவடிக்கைகளுக்கேற்ற படியும் நடக்க வேண்டாமா?" என்ருன்.

"உலகத்தைப் பற்றி எனக்கு அக்கறை யில்லை. நீங்கள் இருவரும் என்ன சொல்கிறீர் களோ அதன்படி நான் நடக்கிறேன்" என்ருள்.

"சரி நான் ஒன்று சொல்கிறேன். அதன் படி நடக்கச் சம்மதிப்பாயா?" என்ருன் அம்பல வாணன்.

"சரி......ஆனுல் ஒன்று! ஒருவரைவிட்டு மற்றவரை மணந்துகொள்ளும்படி மட்டும் என்

ரிடம் நீங்கள் சொல்லவேகூடாது. உங்களில் ஒருவர் பிரிவையும் என்னால் சகிக்கமுடியாது'' என்ருள்.

"இன்னும் பழைய கதையைத்தானே படிக்கிருய். நீ நினைப்பது நடக்காத காரியம். நீ எங்கள் இருவர்மீதும் சமமான அன்பையே செலுத்துகிருய் என்பதும், நாங்கள் இருவரும் ஏற்றத்தாழ்வில்லாமல் உன்மீது அன்புகொண்டிருக்கிறோம் என்பதும் உண்மைதான். ஆனால் கலியாணம் என்று வருகிறபோது எங்கள் இருவரில் யாராவது ஒருவர் தங்கள் வாழ்க்கையைத் தியாகம் பண்ணித்தான் ஆகவேண்டும். இதைத் தேர்ந்தெடுப்பதற்காக எங்கள் இருவர் பெயர்களையும் எழுதித் திருவுளச் சீட்டாக எடுப்போம். அதில் யார் பெயர் வருகிறதோ அவரை நீ மணந்துகொண்டு வாழலாம்'' என்று அம்பலவாணன் கூறினன்.

அங்கயற்கண்ணிக்கு இது சரியென்று தோன்றவில்லை. "அப்படியானல் உங்களில் ஒருவரை எப்படியாவது தள்ளவேண்டி வருமே! அவர், வேறு யாராவது ஒரு பெண்ணை மணந்துகொண்டு வாழ்வதானல், ஆ! அதை என்னல் நினைக்கவே முடியவில்லை. என் வாழ்க்கை, அவர் வாழ்க்கை இரண்டும் பாழாகவல்லவா முடியும்'' என்ருள்.

அம்பலவாணன் நிதானமாக "அங்கயற்கண்ணி! அவ்வாறு தள்ளப்பட்டவன் நானுக

இருந்தால் வேறு மணம் செய்துகொள்ள மாட்டேன். முன்போலவே ஒரு சிநேகிதனுக என் வாழ்க்கையை நடத்துவேன். இது நிச்சயம்" என்ருன்.

இது வரையில் மௌனமாகக் கவனித்துக் கொண்டிருந்த மதிவதனனின் முகம் கோபத்தினுல் சிவந்தது. "திருவுளச்சீட்டாவது மண்ணுங் கட்டியாவது! என் அங்கயற்கண்ணி எனக்குத் தான். திருவுளச் சீட்டின்படி அம்பலவாணன் அவளை மணக்க நேரிட்டால்!..." என மனதிற்குள்ளாகக் குமுறினுன். ஆத்திரத்தோடு துடிதுடித்துக்கொண்டிருந்தான். அவன் அம்பலவாணனைப்போல அவ்வளவு பொறுமை உடையவன் அல்ல. உணர்ச்சிகளை அவனுல் அடக்கவே முடியாது. அம்பலவாணன் சொன்ன யோசனை, முட்டாள் தனமாகவே அவனுக்குப்பட்டது. ஆகையால் அங்கயற்கண்ணியின் எதிரே சென்று "அங்கயற்கண்ணி, அந்தத் திருவுளச் சீட்டு யோசனைகள் ஒன்றுமே தேவையில்லை. உனக்கு யாரைப்பிடித்திருக்கிறது? என்னைத்தானே! உம், சொல், சொல்லி விடு!" என்று பரபரப்போடு கேட்டான். "அம்பலவாணன் தன் உயிர்த்தோழன்; தன்னைப்போலவே அவனுக்கும் கோபிக்க உரிமை உண்டு" என்பதைக்கூட அவன் அந்த நேரத்தில் மறந்து விட்டான். அவன் எதிரிலேயே இவ்வாறு நிதானமிழந்து பேசுவதற்கு அவன் வெட்கப்படவில்லை.

அங்கயற் கண்ணி தங்கப்பதுமைபோல் அசைவில்லாமல் நின்றுகொண்டிருந்தாள். அம்பலவாணன் தன் நண்பனுடைய நிலைமையை அறிந்து அவனைச் சாந்தப்படுத்தினன். மதிவதனன் ஒருவாறு தன் ஆத்திரத்தைத் தணித்துக்கொண்டவன் போலக் காணப்பட்டாலும், அம்பலவாணனை அந்த விநாடியிலிருந்து ஒரு ஜன்ம விரோதியாகவே தீர்மானித்துவிட்டான். "திருவுளச்சீட்டில் யார் பெயர் வந்தாலும் சரிதான். வேறு எந்த விதத்திலும் அங்கயற் கண்ணியை மனைவியாக அடைந்தே தீருவது" என்று மதிவதனன் மனதிற்குள் முடிவுகட்டி விட்டான்.

அம்பலவாணன் இருவர் பெயர்களையும் இரண்டு சீட்டுக்களில் எழுதி, ஒன்றும் பேசாமல் நின்று கொண்டிருந்த அங்கயற்கண்ணியின் முன்பு போட்டு 'ஒன்றை எடு' என்றான். கனவு நிலையில் இருந்த அங்கயற்கண்ணி ஏதோ ஒரு சீட்டை எடுத்து வாசித்தாள். 'அம்பலவாணன்' என்று எழுதியிருந்தது.

மதிவதனனின் உடம்பு படபடவென்று துடித்தது. சட்டென்று எழுந்து விரைவாக நடந்தான். அங்கயற்கண்ணி அவன் முன்னால் போய் நின்றுகொண்டு, "நாம் மூன்று பேரும் ஒன்றாகத் தானே வாழப்போகிறோம். உங்களை நான் தள்ளி விட்டதாக எண்ணிக்கொண்டீர்

களே! நில்லுங்கள்" என்று எவ்வளவோ கெஞ்சினுள்.

"சரி, எட்டிநில்" என்று சொல்லிவிட்டு அவர்களைப் பிரிந்து போய்விட்டான். பின்பு அம்பலவாணனும் மிகுந்த வருத்தத்துடன் தனது மாளிகைக்குச் சென்று விட்டான். அங்கயற்கண்ணி அங்கிருந்த பளிங்குமேடையின் மேல் உட்கார்ந்தாள்.

மூன்று பேர்களுடைய மனதிலும் ஏதோ ஒன்று வாட்டி வதைத்துக்கொண்டிருந்தது.

*

* *

அன்று மாலை மதிவதனன் மிகவும் உற்சாகமாகக் காணப்பட்டான். மணம் செய்து கொள்ளப்போகும் தம்பதிகளைத் தன் வீட்டில் விருந்து சாப்பிடும்படி அழைத்து வந்தான். அவனே இருவருக்கும் அன்போடு பரிமாறினுன்.

மதிவதனன் அடைந்துவிட்ட மாறுதலைக் கண்டு இருவரும் ஆச்சரியப் பட்டார்கள். அங்கயற்கண்ணி கூட ஒருவாறு தன் துக்கத்தை மறந்து விட்டாள்.

மதிவதனன் அவர்களோடு சந்தோஷமாக அளவளாவிக்கொண்டிருந்தாலும் தன் மனதிற்குள், "என் அங்கயற்கண்ணியை அவன் மணப்பதை நான் பார்த்துக் கொண்டிருக்கவா?

அடே, அம்பு! நீ என்ன பகற்கனவு கண்டு கொண்டிருக்கிருயோ? இன்னும் இரண்டு விஞடிதான் உன் வாழ்வு. அதன்பிறகு அங்கயற் கண்ணி என்னைத் தவிர வேறு யாரை மணக்க முடியும்?" என்று சொல்லிக் கொண்டான். சாப் பாட்டிலேயே அவன் மனம் செல்லவில்லை.

கடைசியாக மதிவதனன் இரண்டு வெள்ளித் தம்ளர்களில் பழரசம் கொண்டுவந் தான். அவன் அவைகளைக் கொண்டுவரும் போதே அவனது வலதுகை அவனையறியாமலே நடுங்கியது. வலதுகையிலிருந்த தம்ளரை அம்பல வாணன் முன் வைத்துவிட்டுச் சற்று நின்று தன்னை நிதானப் படுத்திக்கொண்டான். ஆனு லும் அவன் கண்களுக்கு அந்த அறை, அதிலுள்ள பொருள்கள் எல்லாம் சுற்றிச்சுற்றி வட்டமிடு வதுபோலவே தோன்றியது. தன் உடம்பெல் லாம் எரிவதுபோல ஒரு உணர்ச்சி......! அவ னுடைய சிந்தனை எதிர்காலக் காட்சியில் மூழ்கியது.

"ஆமாம். அம்பலவாணன் இறந்து விடு வான். ஆனுல்!...ஆனுல்......அதை அங்கயற் கண்ணி எப்படிச் சகிப்பாள்? நான் முரடன். சகித்துக்கொண்டு விடுவேன். அவளைத் தேற்ற முடியுமா? சிநேகிதன் உயிரையே வாங்கிவிடும் ஒரு துரோகி என்றுதானே அவள் என்னை எண்ணுவாள்! அப்புறம் நாங்கள் வாழ்வது எப்படி?...சரி, அதை விட்டுவிடுவோம். அவர்

கள் இருவரும் இப்படியே மணந்து கொள்ளும்படி விட்டுவிடலாம். ஆனால்...முடியாது. அந்தக் காட்சியையும் என்னால் பொறுக்கமுடியாது... முடியாது...அங்கயற்கண்ணி வருந்துவதையோ, அல்லது அவளோடு வாழ்வதையோ நான் காணக் கூடாது......இதற்கு வழி? ஆம் ஒரு வழியிருக்கிறதே! இந்த விநாடியில் எல்லோருமே சந்தோஷத்தோடுதான் இருக்கிறோம். இந்தக்காட்சிதான் நான் கடைசியாகக் காணவிரும்புவது. இதுபோதும்........இதற்குமேல் போய்விடக் கூடாது" என்று மதிவதனனுடைய மனதில் எண்ண அலைகள் மோதிக் கொண்டிருக்கையில், அம்பலவாணன் தன் எதிரே இருந்த பழரசத்தைக் குடிப்பதற்காகக் கையில் எடுத்தான். அவன் தம்ளரை வாயின் பக்கம் கொண்டு போவதற்குள் மதிவதனன் அதை அவன் கையிலிருந்து வெடுக்கென்று பிடுங்கி அதிலுள்ளதை முழுதும் தானே குடித்துவிட்டு மலர்ந்த முகத்துடன் கீழே சாய்ந்துவிட்டான்.

அதன் பிறகு அவன் அங்கயற்கண்ணி அலறிய அழுகைக் குரலையும் கேட்கவில்லை; அம்பலவாணன் உடனே துறவுபூண்ட காட்சியையும் பார்க்கவில்லை.

பாண்டியனின் மகள் கன்னிகையாவே தன் வாழ்நாளைக் கழித்தாள்!

## என்ன பரிசு

நடுமத்தியான வேளை. வெயில் தகித்துக்கொண்டிருந்தது. அன்று அடித்த உக்கிரமான வெயில், மயூகனின் குடிசைமீது அவ்வளவாகத் தாக்கவில்லை. அவனுடைய மனம் வெயிலின் உக்கிரத்தைப்பற்றிச் சிறிது கூடச் சிந்திக்கவில்லை. கன்னத்தில் கை வைத்த வண்ணம், எதிரே யிருந்த திரைச் சீலையையே கண் இமைக்காமல், உற்று நோக்கிக் கொண்டிருந்தான். ஆம்; இன்றுதான் அந்தப் படம் வேண்டுமென்று பெருந்துறை மடாதிபதி கேட்டிருந்தார். சிறிது நேரத்துக்கெல்லாம் அவர் நேரே வந்தாலும் வந்து விடுவார். இன்னும் அந்தப் படம் பூர்த்தியான பாடில்லை.

எதிரேயுள்ள திரைச்சீலையில், சிறுத்தொண்டர் தம் மகனை வாளால் அரிந்து கொண்டிருக்கிறார். ஆனல், குழந்தையின் முகம் எங்கே? அது இன்னும் உருவாகவில்லை. படத்தின் பிறபாகங்களை ஒரு மணி நேரத்தில் போட்டு முடித்த மயூகன், குழந்தையின் முகத்தைப் போடுவதற்கு அன்று காலையிலிருந்து முயன்று கொண்டிருக்கிறன். குழந்தையின் தலைகள் எத்தனையோ

தனித்தனியாக வரைந்து பார்த்து விட்டு, அவைகளைக் காலடியில் வீசி எறிந்தான். அவை களெல்லாம் அவனுடைய தோல்விச் சின்னங் கள்!

தன் மனோ உலகில் குடி கொண்ட, சர்வ லட்சணங்களும் அமைந்த அந்தக் குழந்தை, தன்னை வளர்த்த தந்தையின் கைகளாலேயே வதைக்கப் படும்போது, அதன் முகத்தில் ஏற் படும் உணர்ச்சி பாவம்! – அதுதான் அவனது மனக்கண்ணில் பலபல விதமாகத் தோன்றித் தோன்றி மறைந்து கொண்டிருந்தது. அந்த உணர்ச்சி பாவம் ஒரு விநாடி கூட அவனது மனோ உலகில் நிலைத்து நிற்காதபோது, அவன் அதை எவ்வாறு வரைய முடியும்!

மிகவும் அற்புதமான ஓவியங்களை யெல்லாம் அனாயாசமாக இரண்டொரு மணிநேரத்தில் தன் மனம் திருப்தி யடையும்படி எழுதிப் பூர்த்தி செய்திருக்கிறான் அவன். ஜீவகோடிகளின் உள்ள நிகழ்ச்சிகளை யெல்லாம் சித்திரத்தில் பிரதிபலிக்கச் செய்து, அவைகளைப் பார்த்துப் பார்த்து இன்புறுவதே அவனுடைய வாழ்க்கையின் லட்சியம். ஈசுவரசிருஷ்டியி லுள்ள ஒவ்வொரு வஸ்துவின் மீதும், அவனுக்கு ஒருவிதமான தனி அன்பு. அவைகளையெல்லாம் கடவுளின் அம்சங்களாகவே அவன் கண்டான். அவன் ஒரு பித்தனைப்போல் எப்பொழுதும் தன் குடிசையில் ஆடிப்பாடிக் கொண்டும், மனம்

போன்படி தன் சித்திரங்களோடு அளவளாவிக் கொண்டு யிருப்பான்.

அவன் இதுவரை வரைந்த படங்களில் ஒன்ருவது அவனுக்கு இவ்வளவு சோர்வை உண்டு பண்ணவில்லை. ஆனுல், இன்று தான் அவனுடைய கலைத்திறமையை, மனித உணர்ச்சி பரீட்சை செய்யும் நாள்.

மயூகனுக்குச் சாதம் கொண்டுவரும் பை யன், வழக்கம்போல் குடிசையின் ஒரு மூலையில் சாதத்தை வைத்துவிட்டுப் போய் வெகு நேர மாயிற்று. அதை எங்கிருந்தோ வந்த ஒரு நாய் உருட்டித் தின்று கொண்டிருந்தது. கூண்டி லிருந்த கிளி, இதைக் கண்டு அலறிக்கொண்டி ருந்தது. ஆனுல், மயூகனுடைய மனதை, அங்கே நடந்த நிகழ்ச்சிகளில் ஒன்ருவது இழுக்கவில்லை. அவனுடைய உடம்பிலிருந்து ஆருகப் பெருகி ஓடி அவன் வஸ்திரத்தை யெல்லாம் நனைத்து விட்ட வியர்வையைக்கூட, அவன் உணர வில்லை.

அவனது மனக் கண்ணுக்குத் தோன்றிய ஒரே பொருள் பிராணவஸ்தையிலிருந்த அந்தக் குழந்தையின் உருவெளிதான். ஆனுல் அதன் பரிபூரண உணர்ச்சி பாவம் மாத்திரம் அவனு டைய மனக்கண்ணில் தெளிவாகப் பதியவில்லை.

திடீரென்று அவன் தன் சுய உணர்வை அடைந்தான். தனக் கெதிரேயிருந்த-தன்னுல்

வரையப்பட்ட-படங்கள் அனைத்தும் தன்னைப் பார்த்து ஏளனம் செய்வது போல அவனுக்குத் தோன்றியது. தான் இந்தப் படத்தில் தோல்வியடைவதுதான் கடைசி முடிவு என்ற உணர்ச்சி அவனுடைய மனதில் ஒரு சண்டமாருதத்தைக் கிளப்பிவிட்டது. அவன் இதுவரை அடைந்திராத தோர் ஆத்திரத்தையும் கோபத்தையும் அடைந்தான். அவனுடைய முகம் 'குபீ' ரென்று சிவந்தது; கண்கள், துகிலிகை பிடித்திருந்த அவனது வலது கையை எரித்து விடுவதுபோல் நோக்கின. ஒரு கணம் இந்த நிலை. மறு கணம் உலகம் முழுவதுமே அந்தகாரத்தில் மூழ்கி விட்டதுபோல, அவனுக்கு ஒருவித மயக்கம் உண்டாயிற்று. மீண்டும் கன்னத்தில் கைவைத்த படியே பெருமூச்சுடன் குனிந்து உட்கார்ந்தான்.

குடிசையைச் சுற்றியிருந்த மரங்களில் இலைகள் அசைவற்றிருந்தன. கொஞ்ச நேரத்துக்கு முன் லேசாக அசைந்து கொண்டிருந்த அவற்றின் நிழலும் சலன மிழந்து ஒரே இடத்தில் விழுந்து கொண்டிருந்தது. அந்த நிசப்தமான வேளையில் ஓர் அழகான குழந்தை, மயூகன் இருந்த இடத்தை நோக்கி ஓடி வந்தது. அது அணிந்திருந்த கால் சதங்கைகளின் ஓசையைக் கேட்டு, மயூகன் திரும்பிப் பார்த்தான். அடிக்கடி அவனது சித்திரசாலைக்கு வரும் ஜமீன்தார் வீட்டுக் குழந்தைதான் அது. என்றாலும், அன்று என்னவோ அது புது அழகும் புதுப்பொலிவும் பெற்று விளங்கியது.

“சுகுமார்! இங்கே வா” என்றான் சித்திரக்காரன் மயூகன்.

‘கல கல’ என்ற சிரிப்புடன், அவனுடைய புஜங்களில் தாவி வந்து சாய்ந்தான் சிறுவன் சுகுமாரன்.

மயூகனும் குழந்தையை அன்புடனேதான் ஏந்தி எடுத்தான். ஆயினும், அவனை அறியாமலே அவனது உடம்பு குலுங்கியது; உள்ளமும் நடுங்கியது; அர்த்தமற்ற ஒரு குழப்பம் அவனது மனதை அலைத்தது.

“அண்ணா! இது என்ன படம்? எங்கள் அப்பாவா?” என்று, திரையைக் காட்டி வினவியது குழந்தை.

அந்தக் கேள்வியைக் கேட்டதும், “ஊம்... ஆம்... இல்லை...” என்று கலவரத்தோடு முனகிய மயூகன், குழந்தையை ஒருபுறம் தள்ளி, வெறித்துப் பார்த்தான்.

“அண்ணா! நீ ஏன் இன்னக்கி இப்படி இருக்கே? எனக்குப் பயமாயிருக்கு...ஒரு படம் தரமாட்டியா?........” என்றது குழந்தை.

மயூகன் ஓர் அசட்டுச் சிரிப்புடன் “இல்லை, கண்ணு! படம் தானே? எல்லாப் படமும் உனக்குத்தான்...” என்று சொல்லி, “இங்கேயே இரு. இதோ வந்து விட்டேன்” என்று குழந்

தையை அங்கேயே இருக்கச் செய்து, பின் கட்டுக்குச் சென்று ஒரு மேஜையை எடுத்து வந்தான். குழந்தையை அந்த மேஜைமீது படுக்கவைத்தான்.

"நான் தூங்கியாச்சு, அண்ணு! படம் தா. நான் போறேன்" என்றான் சிறுவன் சுகுமாரன்.

மயூகன் என்றுமில்லாதபடி பல்லைக் கடித்து, "சும்மா இரு. இல்லாத போனல் உதைப்பேன்............உனக்குப் படம் வேண்டாமா?" என்று அதட்டினான்.

பிறகு ஒரு நிமிஷம் கண்ணை மூடி உடல் நடுங்கப் பெருமூச்செறிந்தான். மறுபடியும் மனதை ஏதோ திடப்படுத்திக் கொண்டவன் போல, உக்கிரப் பார்வையுடன் நடந்தான்.

சை! என்ன பேதைமை! கலைஞனுக்கு வாழ்வும் சாவும் ஏது? வேதாந்தி கூடச் சலிக்கலாம். கலைஞனுக்குச் சலிப்பும் சஞ்சலமும் உண்டா? அவனுக்கு நித்தியத்துவம் ஒன்று தான் தெரியும். அழிவென்பதெல்லாம் வெறும் பிரமை, மாயை! மயூகன் இதோ அமர சௌந்தர்யத்தைக் காண வேண்டும்; நிலைப்படுத்த வேண்டும். ஆம்; அதற்கு வழி அதுதான். சர்வாங்க சுந்தரனை இந்தக் குழந்தை, அழகுத் தெய்வத்துக்கு - கலாதேவிக்குப் பலியாக வேண்டியதுதான்.

மயூகன் உறுதி கொண்டுவிட்டான். சுகு. மாரனின் மரணத்தீர்ப்பு ஊர்ஜிதமாகி விட்டது!

குரல்வளையிலிருந்து புறப்படும் ஒரு கோரக். கூச்சல், ரத்தவெள்ளம், பட படவென்ற உடல் துடிப்பு - இவற்ருேடு சுகுமாரின் ஆயுள் முடிந்தது.

அந்தப் பரபரப்பிலே ஆவேச ஜன்னியிலே, ஒரு பரவச வெறி பிறந்தது மயூகனுக்கு. சிறுத் தொண்டனின் படம் பூர்த்தியாகி விட்டது வெற்றி! வெற்றி!!

தான் செய்த காரியத்துக்கு மயூகன் பச்சாதாபப் படவில்லை. படத்தைப் பார்த்துப் பார்த்து மகிழ்ந்தான்; திருப்தி யடைந்தான்.

துண்டிக்கப்பட்ட குழந்தையின் உடலை மேஜையோடு பின்கட்டுக்குக் கொண்டுபோய் ஒரு மூலையில் மறைத்து வைத்துவிட்டு, குடிசை யின் பின்புறமுள்ள கிணற்றுக்குப் போய்க் குளித்தான். உடைகளை மாற்றிக்கொண்டு குடிசையின் வாசல்புறம் வந்து உட்கார்ந்தான்.

சிறிதுநேரத்துக்கெல்லாம் பெருந்துறை மடாதிபதி பல்லக்கில் வந்திறங்கினுர்.

"என்ன, படம் முடிந்து விட்டதா?"

மயூகன் பேசவில்லை. அவனது தலைமட்டில், "ஆகிவிட்டது" என்ற பாவனையில் மெல்ல

அசைந்தது. கூடத்தில் படுதாவால் மூடப் பட்டிருந்த திரைச் சீலையை, வெகு அலட்சிய தோரணையில், எட்டவிருந்தபடியே, கையால் மயூகன் சுட்டிக் காட்டினான்.

மடாதிபதி புன்சிரிப்புடன், "இதென்ன இன்று மௌனவிரதம்!" என்று சொல்லிக் கொண்டே, அந்தத் திரைச்சீலையருகே சென்று படுதாவை விலக்கினார். ஏதோ தீயில் கால் வைத்தவர்போல, 'இஸ்' என்று திடுக்கிட்டு, அவர் பின்வாங்கினார். சித்திரம் அவ்வளவு தத்ரூபமாயிருந்தது. பயங்கரமான அந்தக் கோரக்காட்சி அவரைப் பிரமிக்கச் செய்து விட்டது. "என்ன! குழந்தை துடிக்கிறதே!... அடடா!" என்று கூவினார். அவருடைய கண் களில் கண்ணீரும் தளும்பியது. பின்பு, அப் படியே சற்றுக் கண்களை மூடி நிதானப் படுத்திக் கொண்டு, ஓவியனைப் பார்த்துத் திரும்பினார். அவன் மிரள மிரள விழித்துக்கொண்டு மரம் போல் நின்றான். மடாதிபதி 'விர்' என்று ஓடி வந்து, அவனை அப்படியே கட்டித் தழுவிக் கொண்டார். அந்த ஆலிங்கனத்தை, உணர்ச்சி யற்றவனாகவே அவன் பெற்றுக் கொண்டான். அவன் அதைத் தள்ளவுமில்லை; கொள்ளவு மில்லை. அவனுடைய மூச்சுக் காற்று மாத்திரம், மடாதிபதியைத் தீ சுடுவதுபோல் சுட்டது!

ஓவியனை மடாதிபதி பலவாறு பாராட்டி னார். அன்பும் வியப்பும் கலந்த சொற்களைச்

சொரிந்து புகழ்ந்தார். அவன் மட்டில் பேசவேயில்லை.

"மயூகா! ஏன் இப்படியிருக்கிறாய்? இதற்குரிய பரிசை யார் தருவார்கள் என்ற கவலையாலா? யாரும் தர முடியாதுதான். ஆயினும், கேள். என்ன பரிசு வேண்டும் உனக்கு? எதை வேண்டுமானாலும் கேள்; நான் தருகிறேன்" என்றார் மடாதிபதி.

அதுவரையில் கல் பதுமைபோல் நின்ற மயூகன், 'பொல பொல' என்று கண்ணீர் சொரிந்து விட்டான். ஏதோ நெஞ்சை யடைத்துக் கொண்டது போன்ற குரலில், "பரிசு, ப—ரி—சு!......இதற்குப் பரிசு, மோட்சம் தான்... இதோ அது எனக்காகக் காத்து நிற்கிறது...... போங்கள்; நீங்கள் படத்தை எடுத்துக்கொண்டு போங்கள்...வேண்டாம்...நில்லுங்கள்... அதோ அந்தப் பக்கம் பார்த்து வாருங்கள். எனக்குரிய பரிசை அறிவீர்கள்" என்று படபட வென்று பயங்கரமான தொரு குரலில் சொல்லி, பின் கட்டை அவருக்குச் சுட்டிக் காட்டினான்.

மடாதிபதி ஒன்றும் புரியாதவராக, வியப்புடன் அந்தப் பக்கம் சென்றார். என்ன கோரம்! அதே குழந்தைதான் இது! இங்கே துடிப்பு நின்றுவிட்டது; அங்கே படத்திலே - இன்னும் துடித்துக் கொண்டிருக்கிறது! - இவ்வளவு தான் வித்தியாசம். இதன் சாவிலேதான் அந்த உயிரோவியம் பிறந்திருக்கிறது என்பதை அப்போது

தான் அறிந்தார் மடாதிபதி. என்ன செய்வது என்ன சொல்வது என்றே அவருக்குப் புரியவில்லை. இப்படி அவர் திகைத்து நின்று கொண்டிருக்கையில், கூடத்தில் ஏதோ வேதனையால் உறுமும் அரவம் கேட்டது.

ஐயோ! என்ன சாகசம்! குழந்தையைக் கொன்ற அதே கத்தியைத் தன் மார்பிலே பாய்ச்சிக் கொண்டு, குற்றுயிரும் குலையுயிருமாய் மயூகன் கிடக்கிறான். "என்ன பரிசு! இதுதான் என் பரிசு. கலைஞனுக்கல்ல; கொலைஞனுக்குரிய பரிசு" என்று அவன் முனகினான்.

எமனுடன் மன்றாடிக் கொண்டிருக்கும் அவனையும் அந்த அற்புத ஓவியத்தையும் மாறி மாறிப் பார்த்த மடாதிபதி, தலையைக் குனிந்து, நிதானமும் திடமும் வாய்ந்த குரலில், "இல்லையப்பா! நீ கொலைஞனல்ல. உயிரை வாங்குபவனல்லவோ கொலைஞன்; அநித்திய நரஜன்மம் படைத்த அந்தக் குழந்தையை இதோ சிரஞ்சீவியாகச் செய்துவிட்ட நீ எப்படிக் கொலைஞனாவாய்? நீ அமர நிலையடைந்த கலைஞன். இனி இந்த உலகம் உன்னைத் தாங்காது தான். ஆனால், அது உன்னை மறக்க முடியாது; மறக்காது" என்றார்.

கலைஞனின் முகம் பிரகாசம் அடைந்தது. அவனது வேதனையெல்லாம் போய்விட்டது. நன்றியும் மகிழ்ச்சியும் பிரதிபலிக்க, அமைதியுடன் தலைசாய்ந்தான்.

# என் தங்கை

இந்து கலாசாலைச் சேவகன் மன்னார்சாமி கடிகாரத்தின் எதிரே தூங்கி விழுந்துகொண்டிருந்தான். கடிகாரத்தில் மணி நான்கு அடித்தது. அவனும் ஒரு யந்திரத்தைப்போல தூக்கம் கலைந்து எழுந்திருந்து மூலையில் தொங்கிக்கொண்டிருந்த மணியைக் 'கண கண'வென்று அடித்து முழக்கினான்.

அடுத்த நிமிஷம் கலாசாலையின் வாசல்பக்கம் ஒரே ஆரவாரம். மாணவர்களும் மாணவிகளும் குதூகலத்துடன் வெளியே வந்துகொண்டிருந்தார்கள். சிறுவர்களும் சிறுமிகளும், வேடனுடைய கூட்டிலிருந்து விடுதலையடைந்த பறவைகள் போல, பல பல ஸ்தாயிகளில் கத்திக் கும்மாளம் அடித்துக்கொண்டு வீட்டை நோக்கி ஓடினார்கள். வயது வந்த மாணவர்கள் இரண்டு மூன்று பேராகப் பேசிக்கொண்டே மெதுவாக நடந்து வந்தார்கள். கட்டிடங்களின் ஓரமாக ஒதுங்கி ஒதுங்கி இன்னும் மெதுவாக வந்துகொண்டிருந்த வயது வந்த மாணவிகளின் கூட்டத்தில்தான் ஆரவாரம் அதிகமாக இல்லை. ஆரவாரமில்லாவிட்டாலும் அவர்கள் அணிந்

திருந்த டோலக்குகளும், உடுத்தியிருந்த பச்சை, ரோஸ், மஞ்சள் கலர் புடவைகளும் அவர்கள் வருவதை விளம்பரப்படுத்தின.

அநேகமாக மாணவர்களெல்லோரும் கலா சாலை வாசலைக் கடந்து கடைவீதிக்குப் போய் விட்டார்கள். பால சுப்ரமணியன் மட்டும் கலா சாலை வாசல்பக்கம் தன் வீட்டு வண்டியின் பின் புறம் நின்றுகொண்டிருந்தான். பெண்கள் கூட்டத்தோடு வந்துகொண்டிருந்த கமலா, பாலு வைக் கண்டதும், தன் சிநேகிதிகளிடம் அவசர மாக விடை பெற்றுக்கொண்டு அவன் பக்கம் விரைவாக வந்து சேர்ந்தாள்.

கமலா ஏதாவது சாமான்கள் வாங்க வேண்டுமானால் பாலுவின் அபிப்பிராயத்தைக் கேட்டுத்தான் வாங்குவது வழக்கம். அன்று தனக்கு ஒரு புடவை வாங்க வேண்டுமென்று அவள் பாலுவிடம் காலையிலேயே சொல்லி வைத்திருந்ததால் பாலு தன் வண்டியோடு அவளுக்காகக் காத்திருந்தான்.

* * *

அந்த வருஷம் தான் கமலா இந்துக் கலா சாலையில் வந்து சேர்ந்திருந்தாள். அவள் கலா சாலை சேர்ந்த தினத்தன்று, கலாசாலையில் சேர் வதைப்பற்றி இரண்டொரு விவரங்களை அங்கு நின்றுகொண்டிருந்த பாலுவிடம் கேட்க நேர்ந் தது. பாலு அவளிடம் பதில் சொன்ன முறையி

லிருந்து அவளுக்கு அவன்மீது ஒருவிதப் பற்று தல் உண்டாயிற்று. அதுமுதல் தினமும் இரு வரும் பார்த்துப் பேசாமல் போவதில்லை என்றாகி விட்டது. அவர்களுடைய ஒற்றுமையிலிருந்து, அவர்கள் இருவரும் நெருங்கிய பந்துக்களாக இருக்க வேண்டுமென்று மற்றவர்கள் எண்ணிக் கொண்டார்கள்.

கமலா தினமும் கலாசாலைக்கு ஸ்ரீபுரத்தி லிருந்து ரயிலில் வந்துகொண்டிருந்தாள். உட லழகோடு குண அழகையும் பரிபூரணமாகப் பெற்றிருந்தாள். இவ்வளவுதான் கமலாவைப் பற்றிப் பாலுவுக்குத் தெரியும். பாலு சிந்துபூந் துறையிலுள்ள ஒரு பணக்கார வீட்டுப் பையன்; மிகவும் யோக்கியமானவன் என்பதுவரை தான் கமலாவுக்கு அவனைப்பற்றித் தெரியும். மற்ற விஷயங்களைப்பற்றி ஒருவர்க்கொருவர் கேட்டுக் கொள்ளவில்லை.

தனக்குக் கமலாவின் சிநேகிதம் ஏற்பட்டது முதல், தான் ஒரு லக்ஷிய மனைவியை அடைந்து விட்டதாகப் பாலு எண்ணி மகிழ்ந்துகொண்டி ருந்தான். அவளுடைய உத்தமமான குணங் களைக் கண்டு தனக்குள்ளேயே வியந்துகொள் வான். அவளைத் தன் வாழ்க்கைப் பாதை முழு தும் உற்சாகத்துடன் அழைத்துச் செல்லத் துடி துடித்தான் அவன். ஆனால் அவன் தன் மனதில் பொங்கி யெழுந்து கொண்டிருந்த உணர்ச்சிகளை

அவளிடம் வெளியிடவில்லை. அவனுடைய அடக்க குணமே அதற்குக் காரணம். அவளாகவே ஆரம்பிக்கட்டும் என்று தன் காதலை வெளியிட ஒவ்வொருநாளும் அவன் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தான்.

கமலா இதுவரையில் பாலுவைத் தவிர வேறு யாரிடமும் மனசைவிட்டுத் தாராளமாகப் பேசியதே கிடையாது. ஆண்கள் யாவருமே அவள் கண்களுக்கு எமன்களாகத் தோன்றினார்கள். கல்விக்கும் செல்வத்திற்கும் அதிதேவதையாகப் பெண் தெய்வங்களை வகுத்த பழந்தமிழர்கள், கொடூரமான சாவுக்கு எமன் என்ற ஆண் தெய்வத்தைத்தானே உருவகப் படுத்தியிருக்கிறார்கள் என்றெல்லாம் கமலா எண்ணிக்கொள்வாள். ஆனால் பாலுமட்டும் இதற்கு விதிவிலக்காகத் தோன்றினன். ஆண்களை அடியோடு அவள் வெறுத்து வந்தாலும், வெளிக்குத் தெரிவித்துக் கொள்வதில்லை. தன் விதியை நொந்துகொண்டு தன்னையே தேற்றிக்கொள்வாள். தன்னிடம் மிகவும் வாத்சல்யத்தோடு பழகிவரும் பாலுவிடம், தன் நெஞ்சில் ஊறிக்கிடக்கும் குறையைச் சொல்லி ஆறுதல் பெற அவள் எத்தனையோ தடவை முயன்றுள். ஆனால் அதன் விளைவாக அவன் தன்னை ஏளனமாக நினைத்து விடலாமோ என்ற பயம் அவளைச் சொல்ல விடாதபடி தடுத்தது. பாலு நினைத்துக் கொண்டிருந்தது போல் அவள் அவ

னைக் காதலிக்கவில்லை. தன் துக்கத்தை மறப்பதற்கு அவனோடு பேசிக்கொண்டிருப்பது ஒரு சாதனம் என்றே நினைத்திருந்தாள். அவள் அவனோடு பேசும் போதெல்லாம் அவன் ஒரு சகோதரன் என்ற உணர்ச்சியுடனேயே அவள் உள்ளம் உறவாடிக் கொண்டிருந்தது.

* * *

பாலு இன்று பேச்சை இவ்வாறு ஆரம்பிப்பான் என்று கமலா எதிர் பார்க்கவில்லை. பாலு, வண்டியினுள் கமலாவின் எதிர்ப்புரம் உட்கார்ந்திருந்தான். வண்டி கடைவீதி வழியாகப்போய்க் கொண்டிருந்தது. பாலுவின் மனதில் வெகு நாளாகப் பொங்கிக் கொண்டிருந்த உணர்ச்சி, வார்த்தைகளாகக் கிளம்பின.

"கமலா நீ உடுத்தியிருக்கும் இந்த மேக வர்ணப் புடவை உனக்கு ரொம்ப அழகா இருக்கு! இன்னிக்கி இது மாதிரிப் புடவையே வாங்கு."

"எனக்கும் இதே நிறம்தான் பிடிச்சிருக்கு"

"என்ன கமலா, எந்த விஷயத்திலேயும் நான் சொல்றதை நீ அப்படியே ஒப்புக்கொள்கிறேயே. புடவையைப் பற்றிச் சொல்றதிலேயுமா நான் கெட்டிக்காரன்?"

"அப்படியில்லை! நான் மனதில் எண்ணுவதையே நீங்கள் சொல்லிவிடுகிறீர்கள். அதினால்

தான் நீங்கள் சொல்வதையெல்லாம் நான் ஒப்புக்கொண்டு விடுகிறேன்."

"கமலா, ஒவ்வொரு குடும்பத்திலும் இந்த மாதிரி புருஷன் சொல்வதை மனைவி ஒப்புக்கொள்வதானால் தாம்பத்ய வாழ்க்கை எவ்வளவு சந்தோஷமாக இருக்கும்!

"ரொம்ப சந்தோஷமாகத்தான் இருக்கும். கடவுள் உங்களுக்கு அப்படிப்பட்ட மனைவியைக் கொண்டுவந்து சேர்க்கவேண்டும்."

"நிச்சயமாகக் கொடுப்பார்-ஏன் கொடுத்து விட்டார் என்றே சொல்லலாம். கமலா இருக்கும்போது நான் தேடியாபோக வேண்டும்? என் வாழ்க்கை மிகவும் இன்பமாகத்தான் இருக்கும்."

"உங்கள் வாழ்க்கை இன்பமாக அமைவதற்கு நான் என்ன வேண்டுமானாலும் செய்யத் தயாராயிருக்கிறேன்."

"வேறென்ன செய்யவேண்டும்! நாம் இருவரும் கலியாணம் செய்து கொள்வதுதானே அதற்கு வழி."

கமலா கோபமடைந்தாள். ஆனாலும் அதைக் காட்டிக்கொள்ளாமல் "என்ன அண்ணா, நீங்கள் தானா இப்படிப் பேசுகிறீர்கள்? என்னைக் கலியாணம் பண்ணிக்கொள்ள வேண்டுமென்ற எண்ணத்தை மட்டிலும் தயவுசெய்து விட்டு

விடுங்கள். நான் மனைவியாவதற்குத் தகுதியற்றவள். நீங்கள் என்னைச் சகோதரியாகவே பாவிக்க வேண்டும். இதுவே என் வேண்டுகோள்.

"நீ என் மனைவி ஆகத் தகுதியற்றவள் என்று சொன்னாய்? ஏன் கமலா இப்படிச் சொல்கிறாய்? உன்னை மனைவியாக அடைவதை விட வேறு எனக்கு என்ன பாக்யம் இருக்கிறது. உன்னோடு முதல் முதல் பேசிய அன்றே நான் இதைத் தீர்மானித்து விட்டேன். கமலா நீயே உன்னை தாழ்த்திப் பேசிக்கொள்கிறாய்...... கமலா உன்னை இப்பொழுதே என் வீட்டிற்கு அழைத்துக் கொண்டுபோய் என் அப்பா அம்மாவின் சம்மதத்தைப் பெற்றுக்கொள்ளலாமென்றிருக்கிறேன். நீ தயவு செய்து இந்த 'அண்ணா' வேதாந்தங்களையெல்லாம் விட்டுவிடு. என் வீட்டுக்கு வந்து விட்டு அடுத்த ரயிலுக்கு நீ போகலாமல்லவா? நேரம் கழித்துச் சென்றால் உன் அப்பா அம்மா சண்டைபிடிக்க மாட்டார்களே?" என்று உணர்ச்சி வேகத்தில் ஏதேதோ சொல்லிக்கொண்டு போனான்.

பாலுவின் தீர்மானத்தைக் கேட்டதும் கமலாவிற்குப் பயம உண்டாயிற்று. "உன் அப்பா, அம்மா" என்ற வார்த்தைகள் அவள் நெஞ்சில் அமுங்கிக்கிடந்த குமுறல்களைக் கிளறி விட்டன. பெருமூச்சுடன் பேச ஆரம்பித்தாள். "அண்ணா, நான் இந்த ரயிலுக்கே ஊருக்குப் போகவேண்டும். புடவைகூட இன்னொருநாள்

வாங்கிக்கொள்ளலாம். உங்களிடம் கொஞ்சம் பேசவேண்டியிருக்கிறது. வண்டியை ரயில்வே ஸ்டேஷனுக்குத் திருப்பச் சொல்லுங்கள்" என்றாள். பாலு வண்டியை ரயிலடிக்குத் திருப்பச் சொல்லிவிட்டுக் கமலாவைப் பார்த்து "நீ எதைப்பற்றிப் பேசப்போகிறாய்?" என்று கேட்டான்.

"என் சொந்த விஷயத்தைப் பற்றித்தான் சில வார்த்தைகள் சொல்லவேண்டும். அதைத் தெரிந்துகொண்டால் நீங்கள் என்மீதுகொண்டிருக்கும் தவறான ஆசையை விட்டுவிடுவீர்கள்."

"என்னது? தவறான ஆசையா? சரியான காதல் என்று சொல். அதை நான் விட்டுவிடுவதா? நீ என்னை வெறுத்துத் தள்ளிவிட்டாலும் என் மனதில் எழுந்த இந்தக் காதல் ஒருபோதும் மங்காது."

"உங்கள் மனதில் தோன்றுவது காதல் என்று நீங்கள் பிரமை கொள்கிறீர்கள். அவ்வளவுதான். இருவர் மனமும் காதல் பாதையில் செல்லவில்லையே! எனக்கு உங்கள்மீது அபாரமான வாஞ்சைதான் ஏற்படுகிறதேயொழிய, காதல் என்பதற்கு என் உள்ளத்தில் சிறிதும் இடமில்லை."

"அப்படியானால் நீதான் தவறாகக் காதல் உணர்ச்சியை வாஞ்சையென்று எண்ணிக்கொள்கிறாய்."

“இல்லை அண்ணு, நான் இதை நன்ருக உணர்ந்துதான் சொல்கிறேன்.”

“கமலா, நான் இன்னென்றுகேட்க மறந்து விட்டேன்........நான் அவ்வாறு சந்தேகப்பட வில்லை. இருந்தாலும் கேட்டு விடுகிறேன். உன் உள்ளத்தில் வேறு யாராவது இடம்பெற்று விட்டார்களோ என்னவோ! அவ்வாறிருந்தால் அதை அறியாமல் நான் உன் மீது காதல் கொள்வது தவறுதானே.”

“அண்ணு, என் மீதுள்ள அபாரமான வாஞ்சையினுல்தான் இம்மாதிரித் துணிந்து கேட்டு விட்டீர்கள். நான் அதற்கும் பதில் சொல்லி விடுகிறேன். எனக்கு ஒருவர் மீதும் காதல் ஏற்படவில்லை. அவ்வாறு ஏற்பட்டாலும் அந்த உணர்ச்சியைக் கொன்றுவிடுவேன்.”

இதற்குள்ளாக ரயில்வே ஸ்டேஷனைச் சமீபித்துவிட்டது வண்டி.

“கமலா, உன்னுல் அவ்வாறு செய்ய முடியுமா? அப்படியானுல் நீ ஒரு அபூர்வமான பிறவிதான்.”

“ஆமாம். அபூர்வமான பிறவிதான். தாசியின் மகளாகப்பிறந்த நான் அபூர்வமான பிறவி தான். ரொம்பக் கேவலமான பிறவியென்று சொல்லுங்கள். தாசியின் மகளான நான் காதல் வாழ்வை அடைவது எப்படி?”

"என்ன? நீ.....தாசியின் மகளா.....?"

"ஆம். தாசி செல்லத்தின் மகள். இதை மறைக்கவும் மறக்கவும்தான் நான் கலாசாலைப் படிப்பை நாடினேன். கேவலமான பிறப்பிற் கேற்றபடி கள்ளமனதும் அமைந்துவிட்டது. இந்த விபரம் தெரிந்திருந்தால் நீங்கள் என்னோடு சிநேகம் செய்திருக்கமாட்டீர்கள். உங்களிடம் கூட நான் என் வரலாற்றை இதுவரை மறைத்து வைத்ததற்கு எனது திருட்டுப் புத்திதானே காரணம்!"

"கமலா, இதற்காகவா இப்படி வருந்து கிருய்? எனக்குக் குலம் பெரிதல்ல. குணமும் விவேகமும்தான் வேண்டும். உன்னை நானே மணந்து உன் கவலையையும் அவமானத்தையும் மாற்றுகிறேன். இதற்காக நான் எந்தக் கட்டுப் பாட்டையும் மதிக்கப்போவதில்லை. கமலா, இது உறுதி."

"நான் உங்களைக் காதலிக்காதிருக்கையில் நீங்கள், ஜாதிக் கட்டுப்பாடுகளை மீறித்தான் என்ன செய்ய?"

"கமலா, திடீரென்று நீ ஏன் என்னை இவ் வாறு ஒரேயடியாக வெறுத்துப் பேசுகிருய்? உன் அன்புக்குப் பாத்திரமாகாத அவ்வளவு கொடியவஞ நான்?"

"இல்லை. நீங்கள் என் அன்புக்குப் பாத்திரமாக இருப்பதனால் தான் உங்கள் மீது எனக்குக் காதல் என்பது ஏற்படவில்லை. வாஞ்சை மட்டும் ஏற்படுகிறது. சரி, கலியாணப்பேச்சை இதோடு மறந்துவிடுங்கள். ரயில் வரும் நேரமாகி விட்டது. அண்ணா நான் போய் வருகிறேன். அடுத்த தடவை நீங்கள் என்னிடம் இம்மாதிரிப்பேச்சை எடுக்கக் கூடாதென்று மிகவும் அன்போடு கேட்டுக்கொள்கிறேன்" என்று கமலா அவனுக்கு நமஸ்காரம் செய்துவிட்டு ரயிலில் போய் ஏறிக்கொண்டாள்.

பாலு அவளருகில்போய் தழுதழுத்த குரலில் "உனக்காக வேண்டுமானால் உன்னோடு இதைப் பற்றிப் பேசாமலிருந்து விடுகிறேன். ஆனால் மனதில் நினைக்காமலிருக்க முடியாது கமலா."

அவர்கள் இவ்வாறு பேசிக்கொண்டிருக்கையில் ரயில் புறப்பட்டு விட்டது. விவரிக்கமுடியாத உணர்ச்சிகளால் தாக்கப்பட்ட பாலு நடைப் பிணம்போல வந்து தன் வண்டியில் ஏறி உட்கார்ந்தான். வண்டி வீட்டை நோக்கிப் புறப்பட்டது. ஆனால் அவனுக்கு அந்த வண்டி எங்கோ திக்குத் திசை தெரியாத ஒரு பாலை வனத்தை நோக்கிப் போய்க்கொண்டிருப்பது போலத் தோன்றியது. அன்று இரவு முழுவதும் அவனுக்குத் தூக்கமே பிடிக்கவில்லை.

மறுநாள் சனிக்கிழமை. லீவு நாள். பாலு ஸ்ரீபுரத்திற்கு டிக்கட் வாங்கிக்கொண்டு காலை

ரயிலில் ஏறினான். கமலாவின் தாயாரைக்கண்டு நேரில் இதைப்பற்றிப் பேசி ஒரு முடிவுக்கு வரலாம் என்பதே அவன் இரவு முழுவதும் யோசித்த யோசனைகளின் முடிவு. தன்னுடைய கௌரவத்தை உத்தேசித்தே கமலா தன்னை மணக்க மறுக்கிறாள் என்று அவன் எண்ணினான். அவளுடைய தாயார் மூலமாக அவளை இன்னும் கொஞ்சம் தேற்றினால் கலியாணத்திற்குச் சம்மதித்து விடுவாள் என்பது அவன் கொண்ட நம்பிக்கை!

ஸ்ரீபுரத்தில் இறங்கிக் கமலாவின் வீட்டை விசாரித்துக்கொண்டு போய்ச் சேர்ந்தான். அது ஒரு பெரிய பங்களாவாக இருந்தது. அந்தப் பங்களா வாசலில் தன் வீட்டு மோட்டார் நின்று கொண்டிருப்பதை அவன் கண்டான். அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது.

அங்கு நின்ற வேலையாளைக் கூப்பிட்டு "கமலா இருக்கிறாளா? என்று கேட்டான்.

அதற்கு அவன் "சின்ன அம்மாவையா கேக்கிறீங்க. நீங்க யாரு?" என்றான்.

"நான் அவளோடு படிக்கிறேன். படிப்பு விஷயமாக அவளைப் பார்த்துப் பேசவேண்டும்."

"சின்னம்மாவை இப்போ பார்க்கமுடியாது, சார். அய்யரு வந்திருக்காரு. அவருபோன அப்புறம் வந்தாப் பார்க்கலாம்."

"அய்யர் யாரு?"

"அதுதான் அவுங்க அப்பா ராமசாமி அய்யரு?"

"என்ன அவளுடைய அப்பா வக்கீல் ராமசாமி அய்யரா?"

"ஏதுநீங்க இப்படி அதிசயமாக் கேக்கிறீங்க உங்களுக்கு எந்த ஊரு?"

"எனக்கு சிந்துபூந்துறை"

"அப்படியா? அய்யர் வீடும் சிந்துபூந்துறையிலேதான் இருக்குது. அய்யரு வீட்டுப் பக்கமா உங்க வீடு?"

இல்லே இல்லே. நான் போறேன். நான் வந்து தேடினதாகக் கமலாவிடம் சொல்ல வேண்டாம். என்ன தெரிஞ்சுதா?" என்று சொல்லிக்கொண்டே திரும்பிப் பாராமல் ரய்ல்வே ஸ்டேஷனை நோக்கிப் பழையபடி நடந்தான். அவன் ரயில்வே ஸ்டேஷனை அடைந்த போது ரயில்வர ஒருமணி நேரமிருந்தது. மூலையில் கிடந்த ஒரு பெஞ்சின் மீது உட்கார்ந்தான். கமலா வீட்டு வேலையாள் சொன்ன பதிலிலிருந்து அவன் மனம் தன்னுடைய தந்தை ராமசாமி அய்யரின் கபட நாடகத்தைப்பற்றியே தீவிரமாகச் சிந்தித்துக்கொண்டிருந்தது. அப்பொழுது ஒரு சாமியார் அவனிடம் வந்து "ஐயா பசிக்கிறது. ஏதாவது கொடுங்கள்" என்று கையை நீட்டினார். சாமியாரின் காவி

வேஷ்டியையும் ருத்ராக்ஷ மாலைகளையும் கண்ட வுடன் பாலுவுக்குக் கோபம் பொங்கிக்கொண்டு வந்தது. "போங்கடா அயோக்கியப் பயல்கள். உலகத்தை ஏமாற்ற வேஷம் போடுகிறது. உலகத்தையே துறந்து விட்டாயோ நீ? உனக் கேன் இந்த வேஷம்!" என்று ஒருநாளுமில்லாத படி சாமியார்மீது எரிந்து விழுந்தான்.

உலகம் முழுவதுமே வெளிவேஷமாகத் தோன்றியது அவனுக்கு. தன் தகப்பனார் செய்து வந்த பூஜை, கைக்கொண்டிருந்த வைதீக ஆசார அனுஷ்டானங்கள் எல்லாம் தன்னையும், பளிங்கு போன்ற மனதையுடைய தன் தாயாரையும் ஏமாற்றுவதற்காகத்தான் என்று அவனுக்குப் பட்டது. கமலா முதல்நாள் சொன்ன வார்த்தை கள் ஒவ்வொன்றும் திரும்பவும் அவன் காது களில் ஒலித்தது. அந்த வார்த்தைகளின் மூலம் அவள் தன் உள்ளத்தில் உறைந்து கிடந்த துன்பத்தில் ஒரு கோடியைத்தான் வெளியிட் டாள் என்பதையும் பாலு இப்பொழுது உணர்ந்துகொண்டான். தான் அவளிடம் பிதற் றியதெல்லாம் அவள் மனதில் எவ்வாறு தைத் திருக்கும் என்று எண்ணிப் பார்த்தபோது, திரும்பவும் அவள் முகத்தில் விழிக்காமல் எங்காவது ஓடிவிடலாமா என்று நினைத்தான். தானும் அந்தக் கபட நாடகன் ராமசாமி அய்யரின் மகன்தான் என்பதை அவள் என்றைக் காவது அறிந்துகொண்டால் தன்னையும் ஒரு

வஞ்சகப் பேயாகவே அவள் தீர்மானித்து விடுவாளே என்று அவன் மனம் புண்பட்டது.

அவன் மனதில் இரு கட்சிகள் தோன்றி ஒன்றோடொன்று வாதாட ஆரம்பித்தன. "நீ ஏன் இந்த வஞ்சகப் பாரத்தைச் சுமந்து கொண்டிருக்க வேண்டும்? சாயந்திரம் வரை இங்கேயே இருந்து கமலாவைத் தனியாகச் சந்தித்து உண்மை முழுவதையும் அவளிடம் சொல்லிவிடு. உன் தந்தையை மன்னிக்கும்படி அவள் காலில் விழுந்து மன்னிப்புக்கேள். இதுவே உன் மனதை நிர்மலமாக்கும்" என்றது ஒரு கட்சி.

இன்னொரு கட்சி "அட மடையா, கமலாவின் உள்ளத்தில் புதைந்து கிடக்கும் ஆத்திரத்தைப் பல மடங்கு கிளறிவிடுவதற்காகவா அவளிடம் அந்தப் பாதகன் ராமசாமி அய்யரைப் பற்றிப் பிரஸ்தாபிக்கப்போகிறாய். வேண்டாம். அது பாவம். முடவனைப் பார்த்து, அவனது நிலைமையை விவரித்து நாம் அனுதாபப்படும் போதுதான் அவனுக்குத் தன்னைப் பற்றி அவமானம் உண்டாகிறது. ஆகையால் நீயாக அவளுடையவருத்தத்தைத் தூண்டிவிட்டு அவள் மனதைப் புண்படுத்தாதே. அவளாகவே அறிந்து கொள்ளட்டும் நீ ராசமாமி அய்யரின் மகன் என்பதை. அதுவரையாவது அவள் மனம் ராமசாமி அய்யரை மறந்திருக்கட்டும் என்று சொல்லிற்று.

இரண்டாவது கட்சி சொன்னதே பாலுவுக்குச் சரியென்று பட்டது. அதன்படி நடக்கத் தீர்மானித்துக் கொண்டான். இதற்குள்ளாக ரயில்வரும் சப்தம் கேட்டது. பாலு டிக்கெட் எடுத்துக்கொண்டு பிளாட்பாரத்தில் போய் நின்றான். "குப் குப்" என்று ரயில் இஞ்சினிலிருந்து வரும் புகை அன்று அவனுக்கு மட்டிலும் "வேஷம்! வேஷம்!! என்று கோஷமிட்டுக் கொண்டு வந்ததுபோலத் தோன்றியது. ரயில் புறப்பட்டதும் "நாடகமே உலகம்..." என்று ஒரு எட்டு வயதுப் பிச்சைக்காரப் பெண் பாடிக் கொண்டு வந்தாள். தன் தந்தையைப் பற்றித் தான் அந்தப் பெண் பாடுகிறாள் என்று நினைத்து தன் கையிலிருந்த நாலணாவை எடுத்து அந்தப் பெண் கையில் கொடுத்து விட்டு ஆனந்தமடைந்தான்.

* * *

திங்கட்கிழமை காலையில் கமலா வழக்கம் போல ரயிலில் வந்து இறங்கினாள். பாலு அவள் எதிரில் ஓடிப்போய் "கமலா நீ என் தங்கைதான். நான் அன்று உளறியதையெல்லாம் மறந்துவிடு" என்றான்.

"அண்ணா, நல்லவேளையாகக் கடவுள் உங்கள் மனதை நல்லபடியாக மாற்றிவிட்டார். இரண்டு நாளாக நான் இதைப்பற்றியே கவலைப் பட்டுக்கொண்டிருந்தேன். நீங்கள் இம்மாதிரி மாறுதலடைந்தது என் பாக்யம்தான்" என்று

சொல்லிக்கொண்டே சந்தோஷத்துடன் வண்டியில் ஏறி உட்கார்ந்தாள். பாலுவும் ஏறிக்கொண்டான். வண்டி கடைவீதி வழியாகக் கலாசாலையை நோக்கிப்போய்க்கொண்டிருந்தது.

எதிரே ராமசாமி அய்யரின் கார் வந்து கொண்டிருந்தது. காரினுள் தலையைக் குனிந்து கொண்டு உட்கார்ந்திருந்த ராமசாமி அய்யர் அன்றையப் பத்திரிகையில் மூழ்கி லயித்திருந்தார். அந்தக் காரைக் கண்டவுடனேயே வண்டியினுள்ளிருந்த பாலுவும் கமலாவும் தலையை வேறு வேறு பக்கம் திருப்பிக்கொண்டார்கள். ராமசாமி அய்யரின் கார் தெருவில் கிடந்த ஒரு கூடை தூசியையும், வண்டிக்குள்ளிருந்த சகோதர சகோதரிகளின் மனதில் தாங்க முடியாத ஆத்திரத்தையும் கிளப்பி விட்டு விட்டு வண்டியைத் தாண்டிச் சென்றது.

# ஜட்காவாலா

இருபது வருஷங்களுக்குமுன் - அதாவது வாடகைக்கார்கள் அத்தி பூத்தாற்போல் இங்கொன்றும் அங்கொன்றுமாகத் தோன்றிய காலத்தில் ஜட்காவாலா முனியப்பனின் வாழ்க்கைச்சக்கரம் சரளமாக ஓடிற்று. தினம் இரண்டு ரூபாய்க்குக் குறையாமல் சம்பாதிப்பான். அவன் வைத்திருந்த ஜட்காவைத் தவிர அவனுக்கு வேறு ஆஸ்தி கிடையாது; குதிரையைத் தவிர வேறு உறவினரும் கிடையாது. குதிரையை அநேகமாக அவன் அடிப்பதே இல்லை. "என் குதிரை நின்ற இடமெல்லாம் லக்ஷிமிதான்" என்று அவன் அடிக்கடி சொல்லிக்கொள்வதுண்டு.

ஊருக்குத் தெற்கே ஒரு சிறு குடிசை. அதில்தான் முனியப்பன் தன் மனைவியுடன் வசித்தான். முருகாயியை அவன் தெய்வமாகவே எண்ணியிருந்தான். அவளைக் கலியாணம்செய்து கொண்ட நாள் முதல் தன் நிலைமை உயர்ந்து கொண்டு வருவதை உணர்ந்தான். சாப்பாட்டு விடுதியில் கொட்டை அரிசிச் சோற்றை உண்டு தெருத்திண்ணையில் உறங்கி, கவலையில் விழுங்கப்

பட்டு அறுதியாகக் காலம் போக்கின அவனுக்கு தினமும் வேளா வேளைக்கு நாலுவகைக் கறியோடு மனதுக்குப் பிடித்த சாப்பாடும், குளிப்பதற்கு வெந்நீரும் தயார் பண்ணி வைத்து அவன் வரவை எதிர்பார்த்து வாசலில் உட்கார்ந்து கொண்டிருக்கும் முருகாயியை அவன் குல தெய்வமாகவே நினைத்தான். ஏன் அதற்கு மேலாகவும் நினைப்பான்.

கிடைக்கும் ரூபாய்களை முனியப்பன் தன் மனைவியிடம் கொண்டு கொடுத்துவிடுவான். அவள்தான் வீட்டுக்கு அதிகாரி. முனியப்பனுக்கு எந்த வஸ்துக்கள் பிரியமோ அல்லது அவசியமோ அவைகளை அவன் சொல்லாமலே என்ன விலையானாலும் வாங்கி வந்து விடுவாள். அவன் அதைக்கண்டு ஆச்சரியப்பட்டு, "முருகாயி இந்தச் சாமானெல்லாம் வேணும்னு எனக்கு ஆசைதான். இருந்தாலும் நம்மளைப்போல் ஏளைங்க எப்படி வாங்கமுடியும்னு பேசாமெ இருந்திடுவேன். இதெல்லாம் விலைகொடுத்து வாங்கறதுக்கு ஓங்கிட்டே காசு வௌயுதா என்ன" என்று கேட்பான்.

"எல்லாம் நீங்க குடுக்கற ரூவாயை வச்சுத் தான் வாங்கினேன். ஓங்க சம்பாத்தியத்தை வச்சு ஒரு சிமானுட்டமா வாழலாமே" என்று சிரித்துக்கொண்டே சொல்வாள் முருகாயி.

"நீ பொல்லாதவ; நம்ம வீட்டுச் சாப்பாடு மாதிரி அந்த ஜட்ஜி எசமான் வீட்டிலேகூட கிடையாது பாத்துக்கோ! நெசமா அவ்வளவு ருசியா இருக்குது உன் சமையல். காப்புக்கடுக்கன் எல்லாம் நீ வாங்கிக்கொடுத்துட்டே எனக்கு. இதுக்குமேலே, நான் கேக்கறபோதெல்லாம் செலவுக்குக் குடுக்கறே! அதுவுங்காணுமே எரநூத்தம்பது ரூவா சேத்துவச்சிருக்கேன்னு சொல்றே. நீ பொல்லாதவடியம்மா, பொல்லாதவ" என்று சொல்லிக்கொண்டே முனியப்பன் அவள் கன்னத்தில் தட்டுவான்.

கட்டுவிடாத சிவந்த திரேகம். பரந்த முகத்திற்கொத்த சுருட்டை முடி. காலையில் அவன் வகிடு எடுத்துச் சீவி விட்டது இரவுவரை அப்படியே கலையாமல் இருக்கும். 'ஜல் ஜல்' என்று வண்டி வரும்போது குதிரையின் பிடரி மயிரைப்போல அவன் கிராப்பு காற்றில் அசைவதே ஒரு காட்சிதான். கரை போடாத ஒரு சாயவேஷ்டியை நீளமாக மடிவைத்துக் கட்டி, மேலே ஒரு மல் ஜிப்பா போட்டிருப்பான். சிட்டித்துண்டு ஒன்று வண்டிப் பெட்டியின் மேல் எந்நேரமும் விரித்துக் கிடக்கும். கையில் அழகான பட்டுக் குஞ்சம் கட்டிய ஒரு சாட்டை. அவன் உற்சாகமாக சீட்டி அடித்துக்கொண்டு வண்டியை விரட்டுகையில் அவனுக்கும் அவன் குதிரைக்கும் ஒரு குஷி.

வழக்கமாக அவன் வண்டியில் ஏறிப் போகும் வக்கீல் ரெங்கசாமி அய்யர் ஒரு ஹாஸ்யப்பேர்வழி. அடிக்கடி இவனுடைய குடும்ப வாழ்க்கையைப்பற்றி விசாரிப்பார். அவரிடம் தன் மனைவியைப்பற்றிச் சொல்வதில் முனியப்பனுக்கு ஒருவித ஆனந்தம். அவளுடைய குணத்தைப்பற்றி வாய்கொண்ட மட்டும் புகழ்வான். வக்கீல் அதைக்கேட்டுப் பொறுமை கொள்வதோடு, தன் சாரமற்ற வாழ்க்கையையும் அவனிடம் எடுத்துச் சொல்வார். முனியப்பனுக்குச் சில சமயங்களில் தன் எதிர்காலத்தைப் பற்றிய யோசனை வந்துவிடும். தனக்குக்குழந்தை பிறந்தால், அது ஆணாயிருந்தாலும் சரி, பெண்ணாயிருந்தாலும் சரி, அதை நன்றாகப்படிக்கவைத்து ஒரு உத்தியோகத்தில் அமர்த்திவிட வேண்டும். அது ஆபீசுக்கு ஒரு வண்டியில் ஏறிப்போகும் போது அது தன் மகன் அல்லது மகள் என்று பிறரிடம் சொல்லிக்கொள்ள வேண்டும். இதுவே அவனுக்கு அடிக்கடி தோன்றும் ஆவல்.

அவன் எண்ணத்திற்கேற்றபடி ஒரு பெண் குழந்தை பிறந்தது. அது முருகாயியை உரித்து வைத்ததுபோலிருந்தது. அதன்மேல் முனியப்பனுக்கு அபாரபிரியம். தின்பண்டம், விளையாட்டுச் சாமான், உடுப்பு இவைகளை வேண்டிய மட்டும் வாங்கி விடுவான். குழந்தை அவனுடைய எதிர்கால நோக்கத்தை அறிந்துகொண்டது போல் சிறுவயதிலேயே புத்திசாலியாகத் தோன்

றியது. குழந்தை பிறந்ததிலிருந்து அவனுடைய சந்தோஷம் இன்னும் அதிகமாயிற்று.

இம்மாதிரி இன்பமயமாக ஓடிக்கொண்டிருந்த முனியப்பனின் வாழ்க்கைச் சக்கரம் செல்லும் பாதையில் சிற்சில முட்டுக் கட்டைகள் தோன்ற ஆரம்பித்தன. புற்றீசல்கள்போல வாடகை மோட்டார்கள் மூலை முடுக்குகளிலும் சந்து பொந்துகளிலும் நுழைந்து பிரயாணிகளை ஏற்றிக்கொண்டுபோக ஆரம்பித்தன. முனியப்பனின் குதிரையும் இடைவிடாத உழைப்பினால் தளர்வடைந்து மெலிந்தது. இதோடு அவன் மனைவியும் சில காலமாக சீக்கில் விழுந்து விட்டாள். வீட்டில் இருந்த பணம் முழுவதும் வைத்தியர்கள் கையில் போய்ச் சேர்ந்தும் அவனுடைய மனைவி குணமடையவில்லை. தன் நகை நட்டுகளையும் விற்று மருந்திற்காகவே செலவு செய்தான். அவன் அந்தச் சமயத்தில் வண்டியையும் குதிரையையும்கூட விற்றுவிடத் தயாராக இருந்தான். முருகாயிதான் அதைத தடுத்து விட்டாள்.

முனியப்பன் வண்டி தெருவில் ஓடி ஒரு மாதமாயிற்று. அவன் தன் மனைவியின் பக்கத்திலேயே இருந்துகொண்டு அவளைக் கவனித்து வந்தான். பார்க்காத வைத்தியம் கிடையாது. வேண்டிக்கொள்ளாத தெய்வமும் கிடையாது. ஒரு நாள் முருகாயிக்கு ஜுரம் கடுமையாக இருந்தது. முனியப்பன் பெரிய டாக்டரை

அழைத்து வந்தான். அவர்போட்ட ஊசிகளையும்மீறி, யமன் அவளுடைய உயிரைக்கொண்டு போய்விட்டான். டாக்டர் முகத்தைச் சுளித்துக் கொண்டு "போயிட்டுது" என்று சொன்னவுடன் முனியப்பன் வயிற்றில் குபீலென்று தீப் பிடித்ததுபோலிருந்தது. நின்றுகொண்டிருந்தவன் அப்படியே சவத்தின்மேல் விழுந்து விட்டான். கோவென்று கதறினான்; விழுந்தான்; முட்டிக்கொண்டான். தன் வாழ்வு அன்றோடு குலைந்து விட்டதென்று அவனுக்குப்பட்டது. அவன் மகள் சொர்ணம் தகப்பனைக் கட்டிக் கொண்டு அழுதாள். அவளுக்கு அப்போது வயது பத்து. ஐந்தாவது வகுப்புப் படித்துக் கொண்டிருந்தாள். அவளைப் பார்க்கப் பார்க்க முனியப்பனுக்குத் துக்கம் பொங்கிக்கொண்டு வந்தது.

கடைசியில் பிணத்தை ஒருவாறு அடக்கம் செய்தார்கள். முனியப்பன் வீட்டுக்குத் திரும்பி வந்ததும் பித்துப் பிடித்தவன் போல் ஒரு மூலையில் உட்கார்ந்து விட்டான். பக்கத்திலுள்ளவர்கள் அவனைப் பலவகையிலும் தேற்றினார்கள். தாங்கள் அவனுடைய மகளைக் கவனித்துக் கொள்வதாக எல்லாம் சொன்னார்கள். சொல்லி என்ன செய்ய? முனியப்பன் மனம் ஏக்கத்திலேயே ஆழ்ந்து விட்டது.

சில நாட்களில் முனியப்பனின் வண்டி தெருவில் அங்குமிங்கும் அலையத் தொடங்கியது.

அதை ஓட்டுவது பழைய முனியப்பனல்ல. வாழ்க்கைப்போரில் அடிபட்டு கவலையே உரு வாக வாடி வதங்கிப்போன முனியப்பன் தான். தன் வருத்தத்தையெல்லாம் குதிரையின்மேலும் காட்டி அதையும் வதைத்துக்கொண்டிருந்த எலும்புக்கூடுதான் வண்டியின்முன் உட்கார்ந் திருந்தது. நிலைமை சீர்கெட்டுப்போகும்பொழுது மனிதனுடைய சுபாவம் எப்படி மாறிப்போய் விடுகிறது.

இப்போதெல்லாம் தினம் நாலணு கிடைப் பதே கஷ்டம். சில நாட்களில் வெறும்கையோடு வீட்டுக்குத் திரும்புவான். சொர்ணம் தன் தகப்பன் கொண்டுவருவதை வைத்துக் கஞ்சி காய்ச்சி வைப்பதோடு பள்ளிக்கூடப் பாடங்களை யும் படித்து வந்தாள். முருகாயி இறந்த அன்று சொர்ணத்தைக் கவனித்துக்கொள்வதாக ஆறு தல் கூறியவர்கள் அந்தப்பக்கமே எட்டிப்பார்க்க வில்லை. எல்லாம் வெறும் ஆறுதல் வார்த்தை கள் தானே!

முனியப்பன் அவர்களைப் பற்றிக் குறை சொல்வதே கிடையாது. எல்லாம் தன் தலைவிதி என்று தன்னையே நொந்துகொள்வான். சொர் ணம் கஷ்டப்பட்டு வேலைசெய்யும்படி அவன் பார்த்துக்கொண்டிருக்க மாட்டான். இதற்கா கவே அவன் அடிக்கடி விடுதியில் சாப்பிட்டு விடுவதோடு அவளுக்கும் சாப்பாடு வாங்கிவந்து விடுவான்.

ஐந்தாறு நாட்களாக முனியப்பனுக்கு வாடகையே கிடைக்கவில்லை. ஒவ்வொருநாளும் வெறும் கையோடு வீட்டுக்குத் திரும்புவான். தகப்பன் சாப்பாட்டிற்கு ஏதாவது கொண்டு வருகிருனு என்று சொர்ணம் எதிர்பார்த்து நிற்பாள். சொர்ணம் அப்படி நிற்பதைக்கண்டவுடன் முனியப்பனின் மனம் துடியாய்த் துடிக்கும். "இப்போ ஏதாவது வாடகை கிடையாதா?" என்ற எண்ணத்துடன் வண்டியைத் திரும்பவும் ஓட்டிக்கொண்டு போய்விடுவான். ஆனாலும் என்ன? வழக்கம்போல ஒன்றும் கிடையாமலே பழையபடி திரும்பிவருவான். தன் மகளுடைய வாடிய முகத்தைப் பார்க்காமலே போய்ப் படுத்துக்கொள்வான். சொர்ணமும் நோக்கமறிந்து பேசாமலிருந்துவிடுவாள். முனியப்பனுக்கு இரவு முழுவதும் தூக்கமே கிடையாது. விடிந்ததும் பக்கத்து வீடுகளில் போய் தன் நிலைமையைச் சொல்லி கொஞ்சம் சோறு வாங்கிக் கொண்டு வந்து சொர்ணத்திடம் கொடுத்து, "சொர்ணம், கிளப்பிலேருந்து சோறு வாங்கிக்கிட்டு வந்தேன். சாப்பிடு" என்று சொல்லி அவளைச் சாப்பிடும்படி செய்துவிட்டு வண்டியைக் கொண்டுபோவான்.

எத்தனை நாளைக்கு அயல் வீடுகளில் இந்த மாதிரி கேட்பது? அவனுக்கு அது அவமானமாக இருந்தது. குதிரை புல்லைக்கண்டு அநேக

நாளாகிவிட்டது. அது ஓடச் சக்தியற்று நாளுக்கு நாள் துரும்பாய் இளைத்தது.

ஐந்து நாட்கள் இவ்வாறு கழிந்தன. ஆருவது நாள் இரவு ஒன்பது மணி. ரயிலிலிருந்து பிரயாணிகள் இறங்கி வந்துகொண்டிருந்தார்கள். கார்க்காரர்களும் வண்டிக்காரர்களும் கூட்டத்தை மறித்து மூட்டையைப் பிடுங்குவதற்கு அடிபிடி போட்டுக்கொண்டிருந்தார்கள். முனியப்பனும் அநேக பிரயாணிகளிடம் முரண்டினுன். ஆனுல் காரியம் பலிக்கவில்லை. கடைசியாக நாலைந்து மூட்டை முடிச்சுகளைக் கையிலும் இடுப்பிலும் வைத்துக்கொண்டு ஒரு பாட்டியம்மாள் ஆடி அசைந்துகொண்டு வந்தாள். அநேகம் வண்டிக்காரர்களுக்கும் கார்க்காரர்களுக்கும் டிமிக்கி கொடுத்துவிட்டு வந்தவள் அந்தப் பாட்டி. அவள் வீடு ஸ்டேஷனிலிருந்து மூன்றுமைல் தூரத்திலிருந்தது. கல்லிலாவது நார் உரித்துவிடலாம்; அவள் கையிலிருந்து பைசாத்துட்டுக் கிளப்புவது அதைவிடக் கஷ்டம். பையப்பைய நடந்து வழியில் இளைப்பாறிக்கொண்டே வீடு போய்ச் சேர்ந்து விடலாம் என்பது பாட்டியின் எண்ணம்.

முனியப்பன் பாட்டியைக் கண்டதும் "அம்மா வண்டி வேணுமா ?" என்ருன்.

"வண்டியும் வேண்டாம் ஒண்ணும் வேண்டாம். வீடு பக்கத்தில்தான் இருக்கு. நடந்து போயிடுவேன்" என்ருள் பாட்டியம்மாள்.

"இந்த வயசிலே இவ்வளவு சாமானையும் செமந்துக்கிட்டு நடந்துபோவானேன். ஏதாச்சும் குடுத்ததை வாங்கிக்கிறேன். வண்டிலே ஏறுங்க"

"சரி. சந்திப்பிள்ளையார் கோவில் தெருவுக்கு என்ன வாடகை? சொல்லு"

"அம்மா, எட்டணா குடுங்க இங்கேருந்து மூன்று மைல் இருக்கு."

"ஒனக்கு எட்டணாவா வேணும்? நன்னா ருக்கு. ஒரணா குடுத்தா தங்கமா மோட்டாருலே போலாமே! வண்டி வேண்டவே வேண்டாம்" என்று மேலும் நடந்தாள்.

முனியப்பன் அவள் பின்னாலேயே போய்க் கொஞ்சம் கொஞ்சமாக வாடகையைக் குறைத்துக் கடைசியில் மூன்றணாவுக்குச் சம்ம திக்க வைத்து, பாட்டியையும் மூட்டைகளையும் வண்டியில் ஏற்றினான். முனியப்பன் தன் கஷ்ட காலத்தை எண்ணியே அந்த வாடகைக்குச் சம்மதித்தான். அதற்கு நியாயமாகக் கிடைக்க வேண்டிய வாடகை ஆறணா. முனியப்பன் வாடகையைக் குறைப்பதைக்கண்டு பக்கத்தில் நின்ற மற்ற வண்டிக்காரர்கள் அவன் மீது கோபப்பட்டார்கள்.

முனியப்பன் தான் வாங்கப்போகும் மூன் றணாவுக்கு அப்பொழுதே ஜாபிதா தயாரித்துக் கொண்டிருந்தான். வண்டி பத்து மணிக்குப்

பாட்டியின் வீட்டு வாசலில் போய் நின்றது. பாட்டி மனதை வெறுத்து மூன்றணுவை நான்கு தடவை எண்ணிப் பார்த்து அவன் கையில் கொடுத்தாள். முனியப்பன் அணுக்களை வாங்கிக் கண்களில் ஒற்றிக்கொண்டு வண்டியை வீட்டுக்குத் திருப்பினுன். வண்டி வேகமாக வந்துகொண்டிருந்தது. வீட்டுக்குப்போய் நார்ப் பெட்டியை எடுத்துக்கொண்டு கடைக்குச் சென்று இரண்டணுவுக்கு அரிசியும் ஒரணுவுக்கு மசாலாச் சாமான்களும் வாங்க வேண்டுமென்ற யோசனையுடன் வண்டியில் உட்கார்ந்திருந்தான் முனியப்பன்.

வீட்டுக்குச் சமீபத்தில் வண்டி வந்துகொண்டிருந்தபோது, "ஏய்! வண்டியை நிறுத்து" என்ற சத்தம் கேட்டது. கடிவாளத்தைப் பிடித்துச் சடக்கென்று இழுத்தான் முனியப்பன். வண்டி நின்றது. போலீஸ் நாராயண பிள்ளையை எதிரில் கண்டதும் முனியப்பனுக்கு கதிகலங்கிப்போயிற்று. வந்த வேகத்தில் வண்டியில் இருந்த ஒரே விளக்கு அணைந்து விட்டது. முனியப்பன் அதைக் கவனிக்கவில்லை.

"எசமான் தெரியாமல் வந்துட்டேனுங்க. இந்த ஒரு தடவையும் மன்னிச்சுக்குங்க" என்று அவர் காலைத்தொட்டுக் கெஞ்சினுன்.

"சீ கழுதை. அதெல்லாம் நடக்காது. உம். ஸ்டேஷனுக்குத் திருப்பு வண்டியை" என்று

அதட்டினார். முனியப்பன் கெஞ்சினான், கூத்தாடினான். ஆனால் அவன் சொன்னது ஒன்றும் நாராயண பிள்ளையின் காதில் விழவில்லை. அவர் "சரி எடு அபராதம் எட்டணா. இந்த ஒரு தடவையும் உன்னை மன்னித்து விடுகிறேன்" என்று தன் கடைசித் தீர்மானத்தை வெளியிட்டார்.

முனியப்பன் தன் மடியை அவிழ்த்துக் காட்டி "ஐயா இந்த மூணணாத்தான் இருக்குது. இதைக்கொண்டுதான் இன்னிக்கி என்வீட்டிலே சாப்பாடு நடக்கணும். வேறே காசு இருந்தா வஞ்சகமில்லே" என்று கொடும்பாவியும் இரங்கும்படி கண்ணைக் கசக்கிக்கொண்டே சொன்னான். தன்னை எதிர்பார்த்து நிற்கும் தன் மகள் சொரணத்தின் வாடிய முகம் அவன் மனக் கண்ணில் தோன்றியது.

"கொண்டாடா இங்கே" என்று நாராயண பிள்ளை அவன் மடியைப் பிடித்து இழுத்தான். முனியப்பன் "சாமி, சாமி வேறே கதியில்லை"! என்று கதறினான். நாராயணபிள்ளையின் முரட்டுக் கைகள் அவனுடைய பிடறியில் இரண்டடி வைத்ததோடு அவன் மடியிலிருந்த மூன்றணாவையும் பறித்துக்கொண்டன. அந்த மூன்றணாவும் அடுத்த நிமிஷமே அரைப்பெட்டி சிகரட்டாக மாறி நாராயண பிள்ளையின் சட்டைப் பைக்குள் சென்றது. அதிலிருந்து ஒரு சிகரட்டை எடுத்து அவர் பற்றவைத்ததை

அருகில் நின்ற முனியப்பன் பேசாமல் பார்த்துக் கொண்டேயிருந்தான். முனியப்பனுக்கு உலகம் முழுவதுமே சிகரட் புகையாகத்தோன்றியது. வெற்றியடைந்து விட்ட ஒரு வீரன்போல சடக்கென்று வண்டியில் ஏறி உட்கார்ந்து கொண்டு வீட்டிற்குப் போய்ச் சேர்ந்தான்.

குதிரையையும் வண்டியையும் அவன் அன்றிரவே சொற்ப விலைக்கு விற்றுவிட்டான். அன்று அவன் வீட்டில் திருப்திகரமான சாப்பாடு. மறுநாள் முனியப்பன் தன் மகளைக் கூட்டிக் கொண்டு எங்கேயோ நடந்தான். மனதிலுள்ள வருத்தத்தைத் தாங்கமுடியாமல் கண்ணீராக வழிய விட்டுக்கொண்டே சொர்ணமும் அவன் பின்னால் சென்றாள். அவ்வூர் அநாதாஸ்ரமத்தை அடைந்ததும் முனியப்பன் ஆஸ்ரமத் தலைவி யிடம் தன் நிலைமையை எடுத்துச்சொல்லி சொரணத்தை ஆஸ்ரமத்தில் ஒப்படைத்து விட்டான். வெகுதூரம் ஒரு பெரிய பாரத்தைச் சுமந்துகொண்டுவந்தவன் அதை இறக்கிவைத்த பிறகு எப்படி ஆனந்தமாக நடப்பானோ அந்த மாதிரி நடையில் முனியப்பன் அநாதாஸ்ரமத்தி லிருந்து வெளியே வந்தான். பின்பு அவன் போன இடம் ஒருவருக்குமே தெரியாது.

*　　*　　*

பல வருஷங்களுக்குப் பிறகு ஒருநாள் அநாதைப் பள்ளிக்கூடத்து உபாத்தியாயனி

சொரணத்தம்மாள் ஒரு குதிரை வண்டியில் போய்க்கொண்டிருந்தாள். வயதான ஒரு ஏழைப் பரதேசி கண் கொட்டாமல் அந்த வண்டியைப் பார்த்து உள்ளம் பூரித்துக்கொண்டிருந்தார். பக்கத்தில் சென்ற ஒரு வழிப்போக்கனைக் கூப்பிட்டு "இந்தாய்யா, வண்டியில் போகிறது யார் தெரியுமா? என் மகள் சொரணம்" என்றார். வழிப்போக்கன் "இப்படியும் ஒரு பைத்தியம்" என்று நினைத்துக்கொண்டு போனான்.



# குகைச் சிற்பங்கள்

தென்னிந்தியாவில் பல்லவ சாம்ராஜ்யம் வேரூன்றியிருந்த சமயம்.

திருச்சிராப்பள்ளி நகரின் நடுவேயுள்ள மலையிலே உன்னதமான ஓர் கோவிலை அழகு பெற அமைத்தான் நரசிம்மவர்மன். இதைக் கட்டியமைத்தபின், அஜந்தா குகைகளைப்பற்றி அவன் அடிக்கடி சிந்தித்து வந்தான்.

தன் காலத்தில் வாழ்ந்துவந்த தமிழ்நாட்டுச் சிற்பிகளின் கைத்திறமைகளையும் ஒரு தகுந்த இடத்தில் பொறித்து வைத்துவிட எண்ணினான் அவன். பல இடங்களை ஆராய்ந்தான். "திருச்சிராப்பள்ளி மலைக்கோவிலின் பக்கத்திலேயே ஒரு குகை அமைத்து அதனுள் வரிசை வரிசையாகச் சிலைகளைச் செதுக்கிவிடலா" மென்று நரசிம்மவர்மனின் ஆஸ்தானச் சிற்பியான காளிங்கன் கூறினான்.

சிற்ப சாஸ்திரத்தில் மிகவும் அனுபவம் வாய்ந்த காளிங்கனுடைய யோசனை நரசிம்மவர்மனுக்கு ஆறுதலளித்தது. மறுநாளே அந்த மலையில் ஒரு நீண்ட குகை வெட்டுவதற்கான

திட்டங்கள் போடப்பட்டன. அதற்கு வசதி யான ஒரு இடத்தையும் அங்கு தேர்ந்தெடுத் தார்கள் கல் தச்சர்கள்.

குகை வெட்ட வெட்ட உடனுக்குடன் அந்த இடங்களில் எதிர் எதிராகச் சிலைகளைச் செதுக்கும்படி அரசன் சிற்பிகளுக்கு உத்திர விட்டான்.

ஆஸ்தான சிற்பி காளிங்கனுக்கும் ஒரு புது விதமான குதூகலம் உண்டாயிற்று. தான் புதிதாகச் சிருஷ்டிக்கப் போகும் சிலாரூபங்களைக் கண்டு மற்ற நாட்டுச் சிற்பிகள் பிரமிக்கப் போகிறார்கள் என்பதில் அவனுக்கு ஒருவித கர்வம். அரசனுடைய புகழ்ச்சி வார்த்தைகளை எத்தனையோ தடவை கேட்டுக் கேட்டு அலுத்து விட்டான் காளிங்கன. தன்னைப்போன்ற ஒரு சிற்பி, தன் சிற்பத் திறமையை மெச்சி வாயாரப் புகழ வேண்டும்! இதுவே அவனுடைய அந்த ரங்க ஆவல்.

நரசிம்மவர்மப் பல்லவனுடைய உள்ளத்தில் மலர்ந்த சிற்பக் குகை, திருச்சி மலைக்கோவிலின் பக்கத்தில் சிறிது சிறிதாக உருப்பெற்று வந்தது. சிற்பிகளும் சிலைகளை வடிக்க ஆரம்பித்து விட் டார்கள். காளிங்கனுக்கு வயதாகி விட்டாலும், உணர்ச்சி வேகத்தில் ஒரு இளைஞனைப் போலவே மிகுந்த பிரயாசையுடன் கல்லை உருவாக்கி வந் தான். அவன் இதுவரை முயற்சித்திராத

னுணுக்க பாவங்களை யெல்லாம் அந்தக் குகையில் சிருஷ்டிக்கும் முதல் சிலையில் காட்டிவிட எத் தனித்தான். முயற்சிக்குத் தகுந்தபடி அவனுக்குச் சிறந்த வெற்றியும் கிடைத்து விட்டது.

சிற்பிகள் யாவரும் காளிங்கனுடைய கைத் திறமையைக் கண்டு மெச்சினார்கள்.

அவன் செதுக்கியிருந்த, நடனமிடும் கந்தர் வன் சிலையைக் கூர்மையாகக் கவனித்த சிற்பி களில் ஒருவன், "குணசேகரன் வடித்திருக்கும் சிலைக்கு அடுத்தபடியாகத்தான் இதைச் சொல்ல லாம்!" என்றான். மற்றவர்களும் "ஆமாம்! அதுதான் எல்லாவற்றிலும் சிறந்தது. அதற்கு அடுத்தபடியாக உயர்ந்த பாவங்களை வெளியிடு வது இந்தச் சிலைதான்" என்று அதை ஆமோ தித்தார்கள். அவர்கள் சாதாரணமாகத்தான் பேசிக் கொண்டார்கள். ஆனால் அவர்கள் சொன்ன வார்த்தைகள் காளிங்கனுடைய உள் ளத்தில் ஒரு பெரும் புயலைக் கிளப்பிவிட்டது.

அவர்கள் குறிப்பிட்ட குணசேகரன் என் னும் சிற்பி கலிங்க நாட்டைச் சேர்ந்த ஒரு இளை ஞன். அவனிடம் கலா செளந்தர்யம், ரூப செளந்தர்யம், குண செளந்தர்யம் யாவும் ஒருங்கே குடி கொண்டு விளங்கின.

சற்று நேரத்துக்குமுன் வரையில், காளிங்க னுக்கு அவன்மீது அபாரமான அன்பு ஏற்பட்டி

ருந்தது. அவனுக்கு அடிக்கடி தன் வீட்டில் விருந்தளித்திருக்கிறான். குணசேகரனும் காளிங்கனுடைய சிற்ப வேலைகளில் மற்றவர்கள் காணாத அழகுகளையெல்லாம் கண்டு மகிழ்வான். உண்மையிலேயே அவனுக்குக் காளிங்கனிடத்தில் சிறந்த மதிப்பு உண்டு.

இவ்வாறாக அந்த இரு சிற்பிகளும் வெகு காலம் பழகியவர்கள் போல ஒருவர்மீது ஒருவர் அன்பு பாராட்டி வந்தார்கள். ஆனால் அன்று காளிங்கனுடைய காதுகளில் விழுந்த அந்தச் சிற்பிகளுடைய வார்த்தைகள் அவனை வேறு மனிதனாக மாற்றிவிட்டன. சிற்பிகளின் உலகம் குணசேகரனுக்கு அடுத்தபடியாகத் தானே தன்னை மதிக்கிறது என்ற தாழ்வு உணர்ச்சி அவனுடைய நெஞ்சில் பொறாமைத் தீயை ஏற்றி வைத்தது. குணசேகரன் அற்புதமாகச் செதுக்கியிருந்த மணிமேகலையின் உருவத்தைக் காளிங்கன் அலட்சியமாக ஒரு பார்வை பார்த்தான். அந்தச் சிலை மிகவும அழகாகத்தான் அவனுக்கும் தோன்றியது. ஆனால் அவன் மனதில் குமுறிக் கொண்டிருந்த பொறாமைக் கனல் அவனுடைய கலைக் கண்களைக் குருடாக ஆக்கிவிட்டது. "இதைத் தானா இந்தப் பைத்தியங்கள் இவ்வளவு பிரமாதமாக சிலாகித்துப் பேசுகின்றன" என்று தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டு ஒரு பெருமூச்செறிந்தான்.

அன்றைய சம்பவத்திற்குப் பிறகும்கூட, காளிங்கனும் குணசேகரனும் முன்போலவே சாதாரணமாகப் பேசிப் பழகி வந்தார்கள். சந்தர்ப்பங்கள் நேர்ந்தபோதெல்லாம் குணசேகரன் உண்மையாகவே காளிங்கனைப் புகழ்ந்து கொண்டுதானிருந்தான். ஆனால் இப்போது அவனுடைய வார்த்தைகள் முழுதும் வஞ்சகப் புகழ்ச்சியாகவே காளிங்கனுக்குத் தோன்றியது. இருந்தாலும் காளிங்கனுடைய பகுத்தறிவு "குணசேகரன் களங்கமற்ற உள்ளன்போடு தான் உன்னோடு பேசுகிறான். அவனை நீ வெறுக்காதே" என்று சொல்லி வந்தது. குணமும், அன்பும் சம்பந்தப்பட்ட வரையில் குணசேகரன் அவனுக்கு ஒரு லட்சிய புருஷனாகவே விளங்கினான். கலை விஷயத்தில் மட்டிலும் குணசேகரனைத் தன் ஜன்ம விரோதியாகவே தீர்மானித்து விட்டான் காளிங்கன்.

இதற்கிடையில் காளிங்கனுக்கு இன்னொரு தர்ம சங்கடமும் ஏற்பட்டது. அவனுடைய மகள் கலாவல்லி குணசேகரனது குணாதிசயங்களைப்பற்றி அவனிடம் புகழ்ந்து கொண்டிருந்தாள். காதல் தத்துவத்தின் முதல்படி இது என்பதைக் காளிங்கன் நன்றாக அறிந்து கொண்டான். கலாவல்லியைக் குணசேகரனுக்கு மணம் செய்து வைப்பதில் காளிங்கனுக்கு எவ்வளவோ திருப்திதான். அவன் சிறப்பத் திறமைகளைத் தன் வாழ்க்கை முழுதும் ரசித்து இன்ப

மடைய இந்த மணம் மிகவும் அனுகூலமாக இருக்கும். இவ்வாறு தான் காளிங்கன் வெகு நாட்களாக எண்ணிக்கொண்டிருந்தான்.

குணசேகரன் சிற்பக்கலையில் மட்டிலும் தனக்கு ஒரு படி கீழான தேர்ச்சியுள்ளவனாக இருந்திருந்தால், காளிங்கன் தன் மகளை அவனுக்கு மணம்செய்து கொடுப்பதில் கொஞ்சம் கூடத் தயங்கமாட்டான்.

கலாவல்லியின் அழகிற்கும், கலை யறிவிற்கும் ஏற்ற மணவாளன் குணசேகரன் ஒருவனைத் தவிர வேறு யாரும் இருக்க முடியாதென்பதையும் அவன் நன்ருக உணர்ந்திருந்தான். காளிங்கனுடைய மனதில் இவ்விதமாக ஒரு கடும்போர் நிகழ்ந்துகொண்டிருந்தது.

ஒரு நாள் நரசிம்மவர்மன் குகையின் நிர்மாண வேலையைப் பார்வையிட ஒரு பல்லக்கில் வந்திறங்கினுன். சிற்பிகள் ஒவ்வொருவரும் தாங்கள் உயிர்கொடுத்துள்ள சிலா ரூபங்களைப் பலபல விதமாக அலங்கரித்து வைத்திருந்தார்கள். அரசன் ஒவ்வொரு சிலையாகப் பார்த்துக்கொண்டே வந்தான். முதலில் காளிங்கனுடைய கந்தர்வன் சிலையைக் கண்டு உள்ளம் பூரித்தான். “காளிங்கா, அற்புதமாக இருக்கிறது நீ வெட்டியுள்ள கந்தர்வன் சிலை. பல்லவர் காலத்துச் சிற்பங்கள் என்றென்றும் சிறந்து விளங்கும்படி

செய்துவிட்டாய்" என்று சொல்லி மகிழ்ந்தான். ஒரு சிற்பிக்கு இதைவிட வேறு என்ன பெருமை வேண்டும்!

அரசன் மேலும் நடந்தான். கவிஞர்கள் தங்களுடைய காவிய உலகில் மனித சமூகத்தின் லட்சியங்களாக சிருஷ்டித்துவிட்ட அநேக கதா பாத்திரங்களை அந்தச் சிற்பிகள் கல்லில் வடித்து வைத்திருந்தார்கள். தாங்கள் கொடுக்க நினைத்திருந்த அத்தனை உணர்ச்சிகளையும் அவர்கள் வார்த்திருந்த சிலைகளில் அப்படியப்படியே பதித்து விட்டார்கள். நரசிம்மவர்மனுடைய ரசிகத் தன்மைக்கு அவை ஒவ்வொன்றும் தனித் தனி ருசியுள்ள ஒரு விருந்தாகவே இருந்தது.

கடைசியாக அரசன் குணசேகரனது சிலையைப் பார்த்தவுடன், தானும் ஒரு சிலைபோலவே பிரமித்து நின்றுவிட்டான். மணிமேகலை அக்ஷய பாத்திரத்தோடு நின்றுகொண்டிருக்கும் காட்சியைக் கல்லில் செதுக்கியிருந்தான் குணசேகரன். அவனுடைய மனோ உலகில் வெகுகாலமாக மணிமேகலையின் அருள் உருவம் வட்டமிட்டுச் சுழன்று கொண்டிருந்தது. இன்று அதை அப்படியே யாவரும் கண்டு மகிழும் கல் உருவமாகப் பொறித்து வைத்துவிட்டான், பெண்மைக்குரிய அத்தனை அன்பும் அருளும் அந்த மணிமேகலையின் இன்ப முகத்திலே பிரதிபலித்து நின்றது. மணிமேகலை தன் வாழ்க்கை முழுதும்

அறநெறியிலேயே நின்று தன் லட்சியத்தை அடைந்தவள் என்ற உள் உணர்ச்சியும் அந்தச் சிலையின் முகபாவத்தில் தொனித்தது.

கவியின் கற்பனை உருவை இவ்வளவு அழகுடன் கல்லில் செதுக்கிக் காட்டிவிடக்கூடு மென்று அரசனால் நம்பமுடியவில்லை. குண சேகரன் அடக்க ஒடுக்கத்துடன் அரசனுக்கு அருகில் நின்றுகொண்டிருந்தான். காளிங்கனும் சற்று தூரத்தில் நின்று நடப்பவைகளைக் கவனித் துக்கொண்டிருந்தான். அரசன் குணசேகரனு டைய சிலையைப் பார்த்து ரசிக்க, காளிங்கனு டைய பொறாமைத் தீ கொழுந்துவிட்டுப் பரவ ஆரம்பித்தது.

"குணசேகரா! சிற்பக்கலையின் உச்சி நிலையை அடைந்துவிட்டாய் நீ. இதுவரை நான் இதற்கிணையாகச் சொல்லக்கூடிய சிலை ஒன்றைக் கூடக் காணவில்லை" என்று சொல்லிய அரசனு டைய வார்த்தைகள் காளிங்கனுடைய நெஞ்சில் விஷம்தடவிய கூரிய அம்புகளாகவே வந்து பாய்ந் தன. குணசேகரனுக்கு வெகுமதியாகக் கொடுப் பதற்கென்று நரசிம்மவர்மன் தன் முத்துமாலை யைக் கழட்டும்போது, காளிங்கன் அதைக் காணப் பொறுதவனாய், அங்கிருந்து புறப்பட்டுவிட்டான். குணசேகரனை இவ்வாறு பெருமைப்படுத்துவத னால், மற்றச் சிற்பிகளும் அதிக ஊக்கத்தோடு தங்கள் திறமைகளைக்காட்ட முயற்சிப்பார்கள் என்று அரசன் எண்ணினான். ஆனால் அரசனு

டைய இந்த எண்ணம் மற்றச் சிற்பிகளின் உள்ளங்களில் மனப்பூசலையே தூண்டிவிட்டது. இதை உணராமலே அவன அரண்மனைக்குச் சென்றுவிட்டான்.

மன்னன் அளித்த பரிசைப் பெற்றுக் கொண்ட குணசேகரன், சிறிதேனும் கர்வமடையாமல், தன் நண்பர்களிடம் காண்பித்து "அரசன் இதை நம் எல்லோருக்கும் பொதுவாகவே கொடுத்திருக்கிறான். நமது கலையைப் பாராட்டும் ஒரு சிறந்த ரசிக சிகாமணியை நாம் அடைந்திருப்பது நமது பாக்கியம்தான். நாம் ஒன்றுகூடி நமது கலையை வளர்ப்பதற்கும் அதனால் நாம் ஆனந்தமடைவதற்கும் அரிய சந்தர்ப்பத்தை நரசிம்மவர்மப் பல்லவன் நமக்கு அமைத்துக் கொடுததிருக்கிறான். இன்று அவன் என்மீது பிரியம்வைத்து இந்த முத்துமாலையை வழங்கினான். நாளை உங்களில் யாருக்காவது ஒரு ரத்தின மாலையைப் பரிசாகக் கொடுக்கலாம். ஆகையால் இந்தப் பாராட்டுதல்களும், பரிசுகளும் சிற்பக் கலைக்கே செல்கிறது" என்று ஒரு குழந்தைபோல அவர்களோடு பேசி மகிழ்ந்தான்.

குணசேகரனின் களங்கமற்ற உள்ளம் அங்கிருந்த அவனுடைய நண்பர்களின் மனப்பூசலை உடனே அவித்துவிட்டது. காளிங்கனைப் போய்க் காணவேண்டுமென்று குணசேகரன் அங்கிருந்து புறப்பட்டான்.

காளிங்கன் தன் வீட்டின் ஒரு மூலையில் மிகுந்த ஆலோசனையோடு உட்கார்ந்திருந்தான். குணசேகரன் கையில் முத்துமாலையோடு வருவதைக்கண்டு தன் நிலைமையைச் சமாளித்துக் கொள்ள முயன்ருன் காளிங்கன். உணர்ச்சி பாவங்களை நன்ருக உய்த்துணரும் சக்தி வாய்ந்த குணசேகரனுக்குக் காளிங்கனுடைய மனோநிலை புரியாமல் இல்லை. தன்ஞல் இயன்றவரை அவனை மகிழ்விக்க முயன்ருன். காளிங்கன் உணர்ச்சியற்ற தலை அசைப்புகளின் மூலம் குணசேகரனுக்குப் பதிலளித்து வந்தான். அதோடு திடீரென்று சம்பந்தா சம்பந்தமில்லாமல் கலாவல்லியின் கலியாணப் பேச்சையும் அடிக்கடி கொண்டுவந்து புகுத்தினன். அந்தக் கவலைதான் தன்னை மிகவும் வாட்டி வருகிறதென்றும் அவளைக் குணசேகரன் மணந்துகொள்ளவேண்டுமென்றும் சொன்ஞன்.

குணசேகரன் இதைக் கேட்டதும் ஆனந்த பரவசனுகிவிட்டான். "கலாவல்லி எனக்குக் கிடைக்க முடியாத ஒரு பாக்கியம் என்று எண்ணியிருந்தேன். என்னுடைய வெகுநாளைய இன்பக் கனவு இப்பொழுது நனவாக ஆகிவிட்டதைக் கண்டு எல்லையில்லாத ஆனந்தமடைகிறேன். அரசன் தந்த முத்துமாலையை விட ஆயிரம் மடங்கு மேலானது நீங்கள் கொடுக்கப்போகும் கன்னிகாதானம். இதனுல் என் வாழ்க்கையே புனிதமடைந்தது" என்று தான் உணர்ந்த மகிழ்ச்சியைத் தெரிவித்தான்.

சிறிதுநேரம் கழிந்தது. காளிங்கன் திரும்பவும் தன் மகளிடம் வந்தான். "பெண்ணே, நீ எனக்காக ஒன்று செய்யவேண்டும். குணசேகரன் உன்னை மணந்துகொண்டதும், எப்படியாவது தந்திரமாக அவனிடம் நீ ஒரு வாக்குறுதி வாங்கிவிடவேண்டும்....அதாவது இனிமேல் உளி பிடித்துச் சிலை செதுக்குவதில்லையென்று அவன் வாக்களித்து விடும்படி நீ செய்ய வேண்டும்" என்ருன். காளிங்கன் இப்படிக் கூறியபோது அவள் தன் காதுகளையே நம்பமுடியவில்லை. தன் தந்தை கலைவெறியில் ஏதோ சொல்கிருர். நாளடைவில் அந்த வெறி தணிந்து விடும் என்று எண்ணி அவள் மௌனமாக இருந்தாள்.

ஆனல் அவள் எதிர்பார்த்ததற்கு மாருக காளிங்கன் இதைப்பற்றி அவளிடம் அடிக்கடி வற்புறுத்தி வந்தான். தன் தந்தைக்காக அவள் இந்தக் கடமையைச் செய்துவிடுவாள் என்று அவன் நம்பியிருந்தான்.

குறிப்பிட்ட நாளில் கலாவல்லியின் கலியாணம் சிறப்பாக நடைபெற்றது. சில நாள் வரை காளிங்கன் கலகலப்பாகவே இருந்தான். தனது வஞ்சகசூழ்ச்சி தன் மகள் மூலமாக நிறைவேறும் நாளை அவன் ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருந்தான். ஆனல் கலாவல்லி குணசேகரனைப் பற்றிவெகுநாள்வரை ஒருவிதத் தகவலுமே தெரிவிக்காமல் இருந்துவிட்டதால் காளிங்கன் பொறுமையை இழந்துவிட்டான். ஒருநாள் குண

சேகரன் வீட்டில் இல்லாத சமயம் பார்த்துத் தன் மகளைக் காணச்சென்றான் காளிங்கன். மகள் செய்த உபசாரங்களை யெல்லாம் கவனிக்காமல் "கலா, நான் உன்னிடம் கேட்டுக்கொண்டபடி குணசேகரனிடம் வாக்குறுதி வாங்கிவிட்டாயா?" என்று அவளிடம் கேட்டான்.

"அப்பா, என்னால் இந்தக் காரியத்தைச் செய்யமுடியவில்லை. இதை அவரிடம் சொல்வதற்காக வாயெடுக்கும் போதெல்லாம் எனக்கு உடம்பு பதறுகிறது. தலை சுழல்கிறது. கண்கள் இருண்டுவிடுகின்றன. இரண்டொரு தடவை முயற்சித்தபோது நான் மயக்கம் போட்டே விழுந்து விட்டேன். அப்பா! இவ்வளவுகொடிய விஷம்போன்ற எண்ணத்தை என் மனதில் வைத்திருக்கவே உடம்பு கூசுகிறது. விஷத்தை விடக் கடூரமான அந்த எண்ணத்தை இப்பொழுதே என் மனதிலிருந்து எடுத்து எறிந்துவிட்டேன். அப்பா, தங்களிடம் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன், இனிமேல் நீங்கள் இதைப்பற்றி மட்டிலும் என்னிடம் பேசவே கூடாது" என்றாள் கலாவல்லி. அதற்குமேல் காளிங்கன் அவளிடம் ஒன்றுமே பேசவில்லை. விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டு விட்டான்.

காளிங்கன் நம்பியிருந்த சூழ்ச்சி, இப்படி வியர்த்தமானதை நினைத்தபொழுது, அவன் மனதில் குமுறிக் கொண்டிருந்த பொறாமைத் தீ ஜ்வாலையுடன் தகிக்க ஆரம்பித்தது. தலையைக்

கவிழ்ந்த வண்ணமாகவே வீதி வழியாக வந்து கொண்டிருந்தான். அவனுக்கெதிரே குணசேகரன் வெகு தூரத்தில் வந்து கொண்டிருந்தான். அவனைக்காண விரும்பாமல் வேறு வழியாகச் சென்று தன் வீட்டை அடைந்தான் காளிங்கன். குணசேகரனுடைய சிற்பத்திறமையை எவ்வாறு ஒழிப்பது என்ற ஒரே சிந்தனையில் அவன் மூழ்கியிருந்தான். அவன் கை உளி பிடித்து சிற்பங்கள் செதுக்கும்போது மனம் மட்டிலும் சதா இதைப்பற்றியே யோசித்துக் கொண்டிருந்து. அந்தச் சமயத்தில் அவன் செதுக்கிய சிலைகளிலெல்லாம் அவனுடைய இந்தக்கோர எண்ணமே பிரதிபலித்து நின்றது. தன்கோர எண்ணத்தின் சொரூபங்களைக் கல்லில் பார்க்கப் பார்க்க அவற்றின் மீது அவனுக்கு அளவில்லாத வெறுப்பு உண்டாயிற்று. அவைகளையெல்லாம் உடைத்தெறிந்து தன் ஆத்திரத்தைத் தீர்த்துக் கொண்டான். ஆனல் அவனுடைய உள்ளத்தில் அனல் வீசிக்கொண்டிருந்த பொறாமைத் தீயின் உக்கிரம் வரவர அதிகரித்து வந்தது.

ஒரு நாள் அந்தி மயங்கும் வேளை. சிற்பிகள் யாவரும் போனபின்பு, காளிங்கனும் குணசேகரனும் குகை வாசலில் வெகுநேரம் வரை உல்லாசமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். குகையின் வாசலில், நரசிம்மவர்மனின் வெற்றிகளைக் குறிக்கும் ஜயஸ்தம்பம் ஒன்று நாட்டுவதற்காக இரண்டாள் ஆழமுள்ள ஒருகுழி வெட்டப்

பட்டிருந்தது. அதனருகில் பால்போன்ற நில வொளியில் அமர்ந்து பேசிக்கொண்டிருந்த இரு சிற்பிகளும் நடு இரவு ஆகிவிட்டதைக் கவனிக்காமல் சம்பாஷணைகளில் லயித்திருந்தார்கள்.

திடீரென்று காளிங்களின் சுண்டு விரலில் கிடந்த நாகமுத்திரை மோதிரம் அருகிலுள்ள குழியினுள் உருண்டு விழுந்துவிட்டது. இருவரும் பரபரப்புடன் குழியின் அடியில் பார்த்தார்கள். சந்திரனின் ஒளியில், குழிக்குள் கிடந்த மோதிரத்திலுள்ள வைரம் சுடர்விட்டுப் பிரகாசித்தது. அதைப் பார்த்ததும் குணசேகரன், ஆத்திரப் படாமல் "மாமா, மோதிரம் கிடப்பது நமக்கு நன்றாகத் தெரிகிறது. நான் உள்ளே இறங்கி அதை எடுக்கிறேன். பிறகு நீங்கள் உங்களுடைய மேல்வேஷ்டியைப் பள்ளத்தினுள் தொங்கவிட்டால் நான் அதைப் பிடித்துக் கொண்டு எளிதாக மேலே வந்துவிடுவேன்" என்று சொல்லிவிட்டுக் குழியினுள் இறங்கினான்

குழியினுள் இறங்கிய குணசேகரன் மோதிரத்தைக் கையில் எடுத்துக்கொண்டு மேலே பார்த்தபொழுது, உடைபட்ட சிலைஒன்று அவன் தலைக்கு நேராக உருண்டு வந்துகொண்டிருந்தது. "ஐயோ" என்ற ஒரே குரல்! பின்பு ஒரு விநாடி அந்தப் பிராந்தியம் முழுவதிலும் அமைதி நிலவியது. குகை வாசலில் நின்ற காளிங்கன் என்று

மில்லாதபடி "கடகட" வென்று சிரித்தான். அவன் வெகுகாலமாக முயன்றுவந்த சூழ்ச்சி இன்று பலித்துவிட்டது.

தான் செதுக்கியிருந்த கந்தர்வன் சிலையின் அருகில் போய், "கந்தர்வா, சொல்! இனிமேல் யாருடைய சிலைகள் முதன்மை ஸ்தானம் பெறும்?" என்று எக்களித்தான். வெகுகால மாகத் தீவிரமான போரில் ஈடுபட்டு வெற்றி யடைந்த ஒரு வீரனைப்போல வெற்றிக்களிப் போடு அவன் தன் வீட்டை நோக்கிச் சென் ருன். தன் கணவன் ஏன் இன்னும் வீட்டுக்கு வ்ரவில்லை யென்று காளிங்கனிடம் கேட்பதற் காகக் கலாவல்லி அங்கே வந்திருந்தாள். நெற்றி யில் குங்குமத்துடன் விளங்கிய தன் மகளைக் கண்டவுடன், அவளுக்கு நேரவிருக்கும் வைதவ் யக்கோலம் அவன் மனதைச் சவுக்கு கொண் டடித்தது. ஏதோ ஒன்று தன் இதயத்தைக் குத்திவிட்டது போல "அம்மா!" என்று அலறி ஞன். கீழே சாய்ந்துவிட்டான்.

குணசேகரன் குகை வாயிலுள்ள குழியில் வழுக்கி விழுந்து, அதே சமயத்தில் ஒரு கல்லும் அவன்மேல் விழுந்து அதனுல் அவன் இறந்து விட்டான் என்ற செய்தி மறுநாளே நாடெங்கும் பரவி விட்டது. சிற்பிகளின் தலைவனுக விளங்கிய குணசேகரனுக்கு நேரிட்ட மரணத்தைக் கேட்டு நரசிம்மவர்மன் தனது உயிரையே இழந்து விட்டதுபோலத் துடி துடித்தான்.

காளிங்கன் வெகுநாள்வரை படுக்கையை விட்டு எழுந்திருக்கவே யில்லை. தனக்கு அருகி லிருந்து ஆறுதலளித்து வந்த தன் மகளின் "புதுக் கோலத்தை"க் காண அவன் மனம் நரகவேதனை அடைந்தது.

காளிங்கனைக் கொண்டாவது குகைச்சிற்பங் களைப் பூர்த்திசெய்துவிட வேண்டுமென்று அரசன் எண்ணினான். அவன் நோய் வாய்ப் பட்டிருப்பதை அறிந்து, தானே அவனை நேரில் காண்பதற்காகச் சென்றான். காளிங்கன் இருந்த நிலைமையைக் கண்டதும், அவன் தன் மருமகனை இழந்துவிட்ட அதிர்ச்சியினால் அவ்வாறு உருக் குலைந்து விட்டான் என்று அரசன் நினைத்துக் கொண்டான். ஆகவே அரசன் அவனுக்குப் பலவிதத்தில் ஆறுதல் கூறிவிட்டு அரண்மனைக் குத் திரும்பினான்.

இரண்டு மாதங்கள் ஓடி மறைந்தன. கலா வல்லியின் இடைவிடாத ஆதரவினால் காளிங் கன் குணமடைந்து எழுந்தான். "குகையில் வெகு துரிதமாகச் சிற்பங்கள் செதுக்கப்பட வேண்டும்" என்று அரசன் அவனுக்கு ஆக்ஞை யிட்டான்.

காளிங்கன் தன் மனதைக் கல்லாக்கிக் கொண்டு குகைவாசல் வரை சென்றான். உளியை எடுத்தவுடன் கைகள் "கடகட" வென்று ஆட ஆரம்பித்தன. உளியைக் கீழே நழுவ விட்டுவிட்டான். உடம்பின் ஆட்டமும்

உடனே நின்றுவிட்டது. "இனி நான் உளி பிடித்துச் சிலை செதுக்கவே முடியாது. முடியவே, முடியாது. ஆமாம், என் வஞ்சக எண்ணத்திற்கு, என் கைத்திறமையைப் பலியிட்டுவிட்டேன். இனிமேல் நான் உளி பிடித்துச் சிலை செதுக்கவே முடியாது. முடியாது" என்று உரக்கக் கத்திக்கொண்டே மலையின்மேல் தாவிக் குதித்து ஓட ஆரம்பித்துவிட்டான்.

அதன்பின்பு அந்தப் பைத்தியத்தை ஒருவருமே காணவில்லை. எங்கோ சென்று தன் முடிவைத் தேடிக்கொண்டு விட்டான்.

இரண்டு அரிய சிற்ப மணிகளை இழந்துவிட்ட நரசிம்மவர்மனின் மனம் உடைந்துவிட்டது. "குகை வேலையை இதோடு நிறுத்திவிடுங்கள். ஆரம்பத்திலேயே சிற்பிகளைப் பலிவாங்கும் அந்தக் குகை தோன்றவே வேண்டாம்" என்று கோபத்துடன் உத்திரவிட்டுவிட்டான். பல்லவ மன்னனின் மனதில் உருவெடுத்த சிற்பக் குகை, நிர்மாணத்தின் ஆரம்பத்திலேயே விபரீதமாக முடிந்துவிட்டது.

திருச்சி மலைக்கோயிலின் அருகிலுள்ள பல்லவர் குகைச் சின்னங்கள் பார்ப்பவர்கள் மனதில் பலவிதக் கற்பனைகளைத் தூண்டிவிட்டுக் கொண்டு இன்னும் நிலைபெற்று நிற்கிறது.

நன்கொடை ஸ்ரீ